வெளியீடு 2.

உ

சிவமயம்

உமாபதி சிவாசாரியர்

அருளிய

# திருவருட்பயன்

தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவர்

சைவசித்தாந்த கலைச் செல்வர்

திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T.,

எழுதிய உரையுடன்



இந்து மாணவர் சங்கம்
இலங்கைப் பல்கலைக் கழகம், பேராதனை.

உமாபதி சிவாசாரியா

# திருவருட்பயன்

தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவர்
சைவசித்தாந்த கலைச் செல்வர்
திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T.,
எழுதிய உரையுடன்

இந்து மாணவர் சங்கம்
இலங்கைப் பல்கலைக் கழகம், பேராதனை.

முதற் பதிப்பு; செப்டம்பர் 1967.

விலை ரூபா ஒன்று.



அச்சுப்பதிவு :
ஸ்ரீ சண்முகநாத அச்சகம்,
யாழ்ப்பாணம்.

# பதிப்புரை

திருவருட்பயனுக்குப் பல உரைகள் உள. அவற்றுள் பிரமாண மாகக் கொள்ளக்கூடியது நிரம்ப அழகிய தேசிகர் எழுதிய உரையாகும். சிவஞான சித்தியாருக்கு அறுவருரை எழுதிய உரையாசிரியர்கள் அறுவரில் நிரம்ப அழகிய தேசிகரும் ஒருவர். அதனால் அவர் பெருமை புலப்படும். தேசிகர் எழுதிய உரையைப் பிரமாண மாகக் கொண்டு பாட பேதங்களை ஆராய்ந்து சரியான மூல பாடங்களை அமைத்துக் கொள்ளுதல் அவசியம். சரியான மூல பாடங்களை அமைத்துக் கொள்ளாவிடில் பாட்டுக்கும் உரைக்கும் உள்ள சம்பந்தத்தை அறியாது மாணவர் இடர்ப்படுவர்.

சைவ சித்தாந்த கலைச் செல்வர் திரு. க. வச்சிரவேல் முதலியாரவர்கள் பாட பேதங்களை ஆராய்ந்து மூல பாடங்களைச் செப்பஞ் செய்து யாவரும் எளிதில் உணரக்கூடிய அரியதோர் உரை எழுதித் தந்தார்கள். அவ்வுரையின் திட்ப நுட்பங்களைச் சைவ அன்பர்கள் படித்தறிந்து கொள்வார்களாக. ஒவ்வோர் அதிகாரப் பொருளையும் திரட்டித் தொகுப்புரை என்ற தலைப்பில் பத்துக் கட்டுரைகள் இந் நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வுரையை முதலியாரவர்கள் ஐந்து நாட்களில், அதுவும் ஓய்வு நேரங்களில், எழுதி முடித்தார்கள். அதனால் அவருடைய நுண்மாண் நுழைபுலம் அறியப்படும்.

இவ்வரும் பணியை ஆற்றிய திரு. வச்சிரவேல் முதலியாரவர்கள் சைவ அன்பர்கள் அனைவரின் பாராட்டுக்கும் உரியவராகின்றார். அவருக்கு எமது உளங் கனிந்த நன்றி.

இந்து மாணவர் சங்கம்,
இலங்கைப் பல்கலைக் கழகம்,
பேராதனை,
6-9-67.

பேரம்பலம் கநகசபாபதி
போஷகர்.

# பொருளடக்கம்



## தொகுப்புரை



உ

குருபாதம்

தருமை ஆதீனம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்

வழங்கியருளிய

## ஆசியுரை

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இயல்பை உள்ளவாறு உணர்த்துவன 'மெய்கண்ட நூல்கள்' எனப்படும் சித்தாந்த சாத்திரங்கள். அவைகளைப் பயிலும்பொழுது திருவருட்பயன், உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், சிவஞானசித்தி, சிவஞான போதம், திருவுந்தி, திருக்களிற்றுப்படி என்னும் இம்முறையில் பயின்று, பின்னர் ஏனைய நூல்களை ஏற்ற பெற்றியால் பயில்வது என்பது ஒரு பழைய முறை. இம்முறையில் சித்தாந்த சாத்திரப் பயிற்சியில் முதற்கண் நிற்பது 'திருவருட் பயன்' என்னும் சீரிய நூலாகும்.

இந்நூல் சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றின் பொருளையும் வடித்தெடுத்துச் சுருக்கமாக எளிய முறையில் கூறுவது. அதற்கேற்ப இது மிகச் சிறிய யாப்பாகிய குறள் வெண்பாக்களால் ஆக்கப்பட்டது. இவ் யாப்பு வகையினையும், இதன் முதற்குறள், "அகர உயிர்போல்" என்று தொடங்குவதையும், நுதலிய பொருளைப் பல அதிகாரங்களாக வகுத்து அதிகாரம் ஒன்றற்குப் பத்துக்குறள் கூறிச் செல்வதையும் நோக்கினால், இது திருவள்ளுவர் அருளிய திருக்குறளோடு ஒப்ப அமைந்திருத்தல் புலனாகும். ஆகவே, நாற்பொருளை முப்பாலில் அடக்கி, எல்லாப் பொருளும் முற்ற மொழியப்பட்ட திருவள்ளுவரது உலகியல் திருக்குறளின் பின், வீட்டு நெறியைச் சிறந்தெடுத்து இனிதுணர்தற்கு இன்றியமையாது ஓதியுணரத்தக்க மெய்ந்நெறித் திருக்குறளாக இத்திருவருட் பயனை ஆசிரியர் கொற்றவன்குடி உமாபதிதேவ நாயனார் அருளிச் செய்திருத்தல் தெளிவு.

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் தில்லைத் திருச்சிற்றம்பலவாணரே, "அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங் — குடியார்க் கெழுதியகைச் சீட்டு" எனத் திருமுகம் எழுதி அனுப்பப் பெற்ற திருவருட் செல்வராகிய சிவாநுபூதியராதலுடன் வடமொழி தென்மொழிகளில் வல்ல கலாஞானத்தால் பாட்டும் உரை

யும் அருளிச் செய்த பெருஞ்சிறப்புடையவர் என்பதும் யாவரும் அறிந்தது. சித்தாந்த சாத்திரம் பதினுன்கனுள் எட்டு நூல்கள் இவரால் செய்யப்பெற்றன என்றல் மரபு. இவற்றுள் ஒன்ருய், அதிகாரத்திற்குப் பத்துக் குறள்களாகப் பத்து அதிகாரத்திற்கு நூறு குறள் வெண்பாக்களையுடைய, அளவிற் சிறிய இந்நூற்கு, நிரம்ப அழகிய தேசிகர் உரை, சிந்தனையுரை முதலிய சில உரைகள் உள் ளன. எனினும், பல இடங்களில் அவைகளால் பொருள் தெளிவு பெறுதல் அரிதாய் உள்ளது. சில இடங்களில் மூல பாடங்களே ஐயத்திற்கு இடனய் உள்ளன. இவை பற்றிச் சிந்தித்த யாழ்ப் பாணத்துச் சைவப் பெருமக்கள், நம் சித்தாந்த கலைச் செல்வர் காஞ்சிபுரம் திரு. க. வச்சிரவேல் முதலியார், பி. ஏ., எல். டி., அவர்களைச் சித்தாந்த பாடம் நடத்துமாறு கேட்டு யாழ்ப்பாணத் திற்கு வருவித்துப் பாடம் கேட்டு வந்த நாட்களில், இத்திருவருட் பயனுக்கும் ஒரு புத்துரை எழுதித் தருமாறு வேண்டி, அங்ஙனமே எழுதித்தரப் பெற்று, அதனை அச்சேற்றி வெளியிடுவது அறிந்து மகிழ்வெய்துகின்ருேம்.

இப்புத்துரை நூலின் தன்மைக்கு ஏற்பச் சுருக்கமும் விளக்க மும் உடையதாய் அமைந்திருத்தலோடு இன்றியமையாத இடங் களில் சைவ சித்தாந்தத்தில் உள்ள அரிய நுட்பங்கள் பல இனிது எடுத்து விளக்கப்பட்ட விளக்கங்கள் பொதிந்ததாயும் உள்ளது. எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டைக் கூறலாம்.

ஐம்பத்தைந்தாம் பாட்டுரையில், 'உயிர்கள் பொதுவியல்பு தன்னியல்பு இரண்டும் முதல்வனது திருவருளால் விளங்குவனவே' என்பது பற்றிய விளக்கம்; எழுபத்திரண்டாம் பாட்டுரையில் அருள் நிலை, ஆனந்தநிலை இவை பற்றிய விளக்கம்; எழுபத்து நான்காம் பாட்டுரையில், 'தாடலைபோல்' என்பதன் தொடர்பாக 'அத்வைதம், அத்விதீயம்' என்னும் சொற்களுக்குத் தரப்பட்ட விளக்கம் முதலியவைகள் சித்தாந்த வல்லுநர்கள் கண்டு களித்தற்கு உரியன.

திருவருட் பயனில் பொருள் தெளிவில்லாத பல பாட்டுக்கள் உள. அவற்றிற்கெல்லாம் பெரும்பான்மையும் இவ்வுரையாசிரியர் தெளிபொருள் கண்டுள்ளார்.

> **எமக்கென் எவனுக் கெவைதெரியும் அவ்வத்**
> **தமக்கவனை வேண்டித் தவிர்,**
>
> **கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி**
> **உண்டில்லை யல்ல துயிர்,**



> **ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை**
> **தெளிவு தெளியார் செயல்.**

என்பன போன்ற பாட்டுக்களின் உரைகள் அத்தகையன. 34, 48, 80 என்னும் எண்ணுடைய பாட்டுக்களில் இவ்வுரையுள் கொள்ளப் பட்டுள்ள பாடங்கள் அறியத் தக்கன. இன்னேரன்னவற்ருல் இவ் வுரை பலர்க்குப் பெரிதும் பயன் தருவதாகும்.

இப்புத்துரையை எழுதித் தந்த சிந்தாந்த கலைச்செல்வர் திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்களும், இதனை நன்கு வெளி யிடும் யாழ்ப்பாணம் மத்திய கல்லூரி ஆசிரியர் திரு. சு. இராசநாயகம் முதலிய சைவப் பேரன்பர்களும் செந்தமிழ்ச்சொக்கன் திருவருளால் நலம்பல பெற்றுச் சைவப் பணியும், தமிழ்ப் பணியும் செய்து நீடு வாழ்க! சைவ உலகம் இந்நூலைப் பெற்றுப் பயனடைவதாக!

திருச்சிற்றம்பலம்.

---

# திருவருட்பயன்

காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்கும் சரக்கன்று காண்.

நல்குஞ்சரக்கன்று நண்ணின் — நல்ல யானை முகத்தை உடைய இளமையான விநாயகக் கடவுளை (ஒருவர்) மனமொழி மெய்களால் வழிபடின், கலைஞானம் கற்கும் சரக்கு அன்று காண் — (அவர்க்கு) ஞான நூல்கள் வருந்திக் கற்கும்பொருள் ஆகமாட்டா.

ஞான நூல்கள் எளிதின் உணரப்பட்டு உண்மை ஞானத்தைக் கொடுக்கும் என்பது கருத்து.

## க. பதிமுதுநிலை

*[முதல்வனது மேலாகிய இயல்பு]*

1. அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து.

அகர உயிர்போல் — அகரமாகிய உயிர் எழுத்துக்கள் எல்லாவற்றிலும் பொருந்தி வேறற நின்றாற்போல, நிகரில் இறை அறிவாகி எங்கும் நிறைந்து நிற்கும் — ஒப்பில்லாத முதல்வன் ஞான உருவாய் உலகு உயிர் முழுவதும் கலந்து அழிவின்றி நிலைபெறும்.

2. தன்நிலைமை மன்உயிர்கள் சாரத் தரும்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

எங்கள்பிரான் — எம்முடைய இறைவன், தன் நிலைமை மன்உயிர்கள் சாரத்தரும் சத்தி பின்னம் இலான் — சிவமாம் தன்மையை என்றும் உள்ள உயிர்கள் அடையும்படி உதவுகின்ற தனது சத்தியினின்றும் பிரிப்பின்றி உள்ளவன்.

சூரியன் தன்னைத் தோற்றுவிக்கும் போது கதிரவன் எனப்படுகிறான். பிறபொருள்களைக் காட்டும்போது கதிர் (ஒளி) எனப்படுகிறான். அதுபோல, முதல்வன் முத்தான்மாக்களுக்குத் தன்னைப்

பேரின்பமாகக் காட்டி நிற்கும் நிலையில் சிவம் எனப்படுகின்றான். பிறபொருள்களை உயிர்களுக்கு விளக்கி நிற்கும் நிலையில் சத்தி அல்லது அருள் எனப்படுகின்றான்.

சத்தி = வல்லமை.

முதல்வன், தானும் தன் சத்தியுமாக இருதன்மைப் பட்டு இயைந்து நின்று உலகுயிர்களை வியாபித்து நிற்கின்றான் என்பது கருத்து.

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேர்அருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்.

பெருமைக்கும் — (மேற்கூறிய எம் இறைவன்) எல்லாவற்றையும் தம்மிடத்து அடங்கக் கொள்ளும் வியாபகத்திற்கும், நுண்மைக்கும் — எப்பொருளிலும் கலந்து நின்று செலுத்த வல்ல சூக்கும நிலைக்கும், பேர் அருட்கும் — உயிர்கள் மீது வைத்துள்ள பேரிரக்கத்திற்கும், பேற்றின் அருமைக்கும் — ஒருவராற் பெறுதற்கரிய நிலையினுக்கும், ஒப்பின்மையான் — ஒப்பில்லாதவனாய் உளன்.

4. ஆக்கி எவையும் அளித்தா சுடன்அடங்கப்
போக்கும்அவன் போகாப் புகல்.

எவையும் ஆக்கி அளித்து ஆசுஉடன் அடங்கப்போக்கும் அவன் — அவ்விறைவன் எல்லாவற்றையும் படைத்து நிறுத்தி மலப்பிணியினின்றும் நீங்காத உயிர்கள் அம்மலத்தோடு அடங்கி நிற்கும்படி ஒடுக்கும் இயல்புடையவன்; இவ்வியல்புள்ள முதல்வனே, போகாப் புகல் — உயிர்களுக்கு என்றும் நீங்காத புகலிடமாய் உள்ளவன்.

முதல்வன் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலை உடையவன். முத்தொழிலிற்பட்டுவரும் உயிர்கள் தம்மைப் பிணித்திருக்கும் மலத்தின் பிடியிலிருந்து சிறிது சிறிது விடுபட்டு அறிவு வளரப்பெறும். மலத்தினின்று முற்றிலும் விடுபடின் முதல்வனை உணர்ந்து அவனையே புகலிடமாகச் சார்ந்து நிற்கும். பக்குவம் முதிர்ந்த உயிர்களை ஆசுநீக்கித் தன் திருவடியில் அடங்கவைத்து இன்புறுத்துவன். அச்செயல் அருளல் எனப்படும். ஆசு — குற்றம்; இங்கு மூலமலம் எனப்படும் ஆணவத்தைக் குறிக்கின்றது. ஆணவ மலத்தைத் தொழிற்படுத்திக் கர்மத்தை அநுபவிப்பித்தல் மறைத்தல் எனப்படும்.

இப்பாட்டு, முதல்வன் செய்யும் முத்தொழில்களை வெளிப்படையாகவும் அவன் உயிர்களிடத்துச் செய்யும் மறைத்தல், அருளல் என்னும் இரண்டு செயல்களைக் குறிப்பாகவும் உணர்த்துகிறது.





5. அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன்.



அறிஞர்க்கு அறிவாம் உருவம் உடையான் — மெய்யுணர்ந்தார்க்கு ஞானமே தன் இயல்பாக விளங்கி நிற்கும் முதல்வன், அருவும் உருவும் உளன் — (ஏனையோர்க்கு) அருவம் உருவம் அருவுருவம் என்னும் மூன்று திருமேனிகளை உடையவனாய் இருக்கின்றான்.

6. பல்லா ருயிர்உணரும் பான்மையென மேல்ஒருவன்
இல்லாதான் எங்கள் இறை.

பல் ஆர் உயிர் உணரும் பான்மை என — பலவாகிய நிறைந்த உயிர்கள் தலைவன் ஒருவன் உணர்த்த உணரும் தன்மை உடையவை; அதுபோல, எங்கள் இறை மேல் ஒருவன் இல்லாதான் — எம்முடைய இறைவன் தனக்கு உணர்வு கொடுக்கத் தனக்கு மேல் ஒருதலைவனை வேண்டப்படாத, தானே முழுதுணரும் தன்மையை உடையவன்.

இறைவன் தானே அறிந்து உயிர்களுக்கு அறிவிப்பவன். உயிர்கள் முதல்வன் அறிவிக்க அறிவன.

7. ஆனா அறிவாய் அகலான் அடியவர்க்கு
வானாடர் காணாத மன்.

வான் நாடர் காணாத மன் — தேவர்கள் கனவிலும் காணுதற்கு அரியவனாகிய தலைவன், அடியவர்க்கு — தன்னிடத்து அன்புபூண்டு அடித்தொழில் செய்வார்க்கு, ஆனா அறிவாய் அகலான் — நீங்காத ஞான வடிவாய் அவர் உள்ளத்தின்கண் நிறைந்து அவரை விட்டுப் பிரியாது இருப்பன்.

உலகப் பற்றுடையார்க்கு இறைவன் விளங்கித் தோன்றான்; இறைவனையே விரும்பி அன்பு செய்வார்க்கு அவர்களது அறிவுக்கறிவாய்ப் பிரிப்பின்றி விளங்குவான்.

8. எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்கும்அவன் தானே தனி.

எங்கும் எவையும் — எவ்விடத்தும் எவ்வுயிர்களிடத்தும், நீர் உறு எரிபோல் ஏகம்தங்கும் அவன் — நீரில் கலந்த நெருப்பைப்போல் புலப்படாது ஒற்றுமைப்பட்டு மறைந்து நிற்கும் முதல்வன், தானே

தனி — அப்பொருள்களுக்கு வேருக நின்று அவை எய்துகின்ற மாறு தல்களைத் தான் எய்தமாட்டான்.

விகாரப்படும் பொருள்களில் கலந்து நின்றும், தான் விகாரப் படாது செம்பொருளாய் நிற்பன் என்பது கருத்து.

9. நலமிலன் நண்ணுர்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

பேர் சங்கரன் — இறைவனுடைய சிறப்புப் பெயர் சங்கரன் என்பது, சுகத்தைச் செய்பவன் என்பது பொருள். நண்ணினர்க்கு நல்லன் நண்ணுர்க்கு நலமிலன் — தன்னை அறிந்து வழிபட்டார்க்கு இன்பத்தைக் கொடுப்பான், வழிபடாதவர்க்கு நன்மையைக்கொடான்; சலமிலன்—ஆயினும் கோடுதல் இல்லாதவனே ஆவன்.

செய்பவர் செய்திக்குத் தக்கபயன் தருதலின் நடுவு நிலைமையினின்றும் வழுவாதவனே என்றபடி.

சலம் - வஞ்சனை, இங்கு பாரபட்சமுடைமை.

10. உன்னுமுள தைய மிலதுணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கும் மருந்து

உணர்வாய் ஓவாது மன்னுபவம் தீர்க்கும் மருந்து உளது — முதல்வன் நம் உணர்விற்கு உணர்வாய்ப் பிரிப்பின்றி நம்மைத் தொடர்ந்து வரும் பிறவிப் பிணியைத் தீர்க்கும் மருந்தாக இருக்கின்றுன். ஐயம் இலது — இதற்கு ஐயம் இல்லை. உன்னும் — (ஆதலால்) அம்முதல்வனை அன்புடன் நினைந்து வழிபடுவீராக.

## உ. உயிரவை நிலை

*[ உயிர்களது இயல்பு ]*

11. பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை.

துறந்தோர் துறப்போர் தொகை — வீடுபெற்ருேர் எண்ணிக்கையும் வீடுபெறுதற்குரிய எஞ்சிய உயிர்களது தொகையும், பிறந்த நாள் மேலும் பிறக்கும் நாள் போலும் — உலகம் தோன்றியகாலந் தொட்டு இதுவரை கடந்துள்ள நாட்களையும் இனி உலகம் முடியும் வரை வரக்கூடிய நாட்களையும் எண்ணி அறிந்தாற் போல்பவை. எண்ணில் அடங்கா என்பது கருத்து.

12. திரிமலத்தார் ஒன்றதனிற் சென்ருர்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர்.

மும்மலத்தாராயும் இருமலத்தாராயும் ஒருமலத்தாராயும் ஆன்மாக்கள் மூன்றுவகையாக உள்ளனர்.

13. மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை.

மூன்று திறத்துள்ளாரும் மூல மலத்துள்ளார்கள் — மேற்கூறிய மூவகைப்பட்ட உயிர்களும் மூலமலத்தால் மறைப்புண்டவரே; தொத்து துணை உள்ளார் — அவர்களுள் மாயையாகிய பந்தத்தை உடையவர்கள், தோன்றலர் — தாம் கட்டுற்றவர் என்னும் தன்மை தமக்குத் தெரிதல் இலர்.

தொத்து - கொத்து, அதாவது கொத்துக்களாக நின்று பிணிக்கும் மாயை. இதனுல் மாயையோடு கூடியவர் மும்மலத்தார் என்பதும், ஒரு மலத்தார் என்றது மூலமலத்தால் பிணிப்புண்டோர் என்பதும், மலம், கன்மம் இரண்டாலும் பிணிப்புண்டோர் இருமலத்தோர் என்பதும் குறிப்பித்தபடி. மாயையினுல் பிணிப்புண்டார் தாம் கட்டுற்றதை அறியார். எனவே, ஏனைய இருவரும் தாம் கட்டுற்றதை உணர்வர் என்பதாயிற்று.

14. கண்டவற்றை நாளும் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்.

நாளும் கண்டவற்றை கனவில் கலங்கியிடும் திண்திறலுக்கு — அன்றாடம் நனவில் தெளியக் கண்ட பொருள்களை கனவு நிலையில் மறந்து மயங்குகின்ற திண்ணிய ஆற்றலுடைய உயிர்களுக்கு, செயல் என்னோ — சுதந்திரச் செயல் உண்டு என்பது எங்ஙனமோ? திண்டிறல் என்பது இகழ்ச்சிக் குறிப்பாய் அற்ப ஆற்றல் என்னும் பொருள் தந்து நின்றது. உயிர்கள் சுதந்திர அறிவுடையன அல்ல, உணர்த்த உணர்பவை என்பது கூறப்பட்டது.

15. பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
அறிவென்ற பேர்நன் றற.

பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு — (நனவு நிலையினும்) ஐம்பொறிகளோடு கூடுதல் இன்றி ஒன்றையும் அறியமாட்டாத உயிர்க்கு, அறிவு என்ற பேர் அற நன்று — அறிவுடையது என நூலோர் கூறும் பெயர் மிகவும் அழகியது.

கருவிகளாலன்றி ஆன்மா அறியமாட்டாது. புந்தி — ஆகுபெயர் புத்தியை இடமாகக் கொண்டு அறிவது.

16. ஒளியும் இருளும் உலகும் அலர்கண்
தெளிவி லெனில்என் செய.

அலர்கண் தெளிவு இல் எனில் — விழித்த கண் காணும் தன்மை இல்லாதது என்றால், ஒளியும் இருளும் உலகும் என்செய — விளக்கும் இருளும் உலகத்துப் பொருள்களும் இருப்பினும் அவை என்ன பயனை விளைத்தற்கு உள்ளன ?

கண் காணுந்தன்மை உடையதாயினன்றி ஒளியும் இருளும் பொருளும் இருந்தும் இல்லாதவையேயாம். அது போல ஆன்மா அறியுந் தன்மை இல்லதாயின் மலமும், மாயையும் உலகத்துப் பொருள்களும் இருந்தும் புலப்படமாட்டா. அவை புலப்படுதலின் ஆன்மா அறியுந் தன்மை உடையது என்பது துணியப்படும். ஆயினும் அவ்வறிவை மூலமலம் மறைக்கும் என்பதும், ஐம்பொறி மனம் முதலியவை கண்ணுக்கு விளக்குப் போல நின்று உலகத்துப் பொருள்களை ஆன்மாவிற்கு விளக்கிக் காட்டும் என்பதும் இதனால் கூறப்பட்டன. இது ஒட்டு அல்லது பிறிதுமொழிதல் என்னும் அணி.



17. சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கண்இவை
உய்த்தல்சத சத்தாம் உயிர்.

சத்து அசத்தைச் சாராது — சத்தாகிய முதல்வன் அசத்தாகிய உலகைச் சார்ந்து அனுபவியான்; அசத்து அறியாது — அசத்தாகிய உலகம் அறிவில்லது, (ஆதலால்) அது முதல்வனை அறியாது; அங்கண் — அவ்விரண்டும் இவ்வாறு இருத்தற்கண், இவை உயிர் உய்த்தல் — இவ்விரண்டையும் உயிர் தன்னறிவைச் செலுத்திப் பகுத்து அறிதலினால், சத்து அசத்தாம் — அவ்வுயிர் சத்தைச் சார்ந்து சத்தாகவும், அசத்தைச் சார்ந்து அசத்தாகவும் நிற்கும் இயல்பினது.

18. இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்லாம்
பொருள்கள் இலதோ புவி.

இந்நிலம் இருள் வந்தபோது இருளாகியும் ஒளி வந்தபோது ஒளியாகியும் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் பொருள்களை உடையதன்றோ. எல் — ஒளி. ஒரு பொருளுக்கு இரு தன்மை எங்ஙனம் உளதாகும் என்பார்க்கு உவமை கூறி ஆன்மா சதசத்து என்றதை இப்பாட்டு வலியுறுத்துகிறது. கண்ணும் படிகமும் விண்ணும் இருளில் இருளாகி ஒளியில் ஒளியாகி நிற்கும் பொருள்கள். அவற்றைப் போல அசத்தைச் சார்ந்து அசத்தாயும், சத்தைச் சார்ந்து சத்தாயும் நிற்பது உயிர் என்பது கருத்து.

19. ஊமன்கண் போல ஒளியும் மிகஇருளே
யாம்மன்கண் காணா தவை.

ஊமன் கண்போல — கோட்டானுடைய கண்ணுக்குப் பகல் இரவாக நிற்றல் போல, மன்கண்காணாதவை — நிலைபெற்ற பேரறிவாகிய சிவஞானத்தைக் காணாத ஆன்மாக்களுக்கு, ஒளியும் மிக இருளே — எல்லாவற்றிற்கும் ஆதாரமாக உள்ள பேரொளியாகிய சிவமும் காட்சிப்படாமையால் அறியாமையாகவே இருந்தது. காணாதவை — காணாதவற்றிற்கு, நான்கன் உருபும் சாரியையும் செய்யுள் விகாரத்தால் தொக்கன.

கண் — அறிவு; மன்கண் — நிலைபெற்ற அறிவாகிய சிவஞானம். இப் பாட்டும் பிறிது மொழிதல் என்னும் அணி.

பேரறிவாகிய முதல்வன் எங்கும் வியாபித்து நிற்பினும் உயிர்களுக்குப் புலன் ஆகாதது என்னே? என்னும் வினவிற்கு விடை கூறிற்று. ஊமன் கண்போல உயிரின் அறிவு பேரறிவைக் கவரும் வலி இல்லாமையால் முதல்வனைக் காணுதாயிற்று என்பது கருத்து.

20. அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவது
என்றளவொன் றில்லா இடர்.

உயிர் அன்றளவும் அளவொன்றில்லா இடர் ஆற்றும் — உயிரானது அநாதி தொடங்கி இன்றுவரை அளவில்லாத துயரத்தைத் தாங்கி நிற்கின்றது. அந்தோ — ஐயோ! அருள் தெரிவது என்று — அவ்வுயிர் பேரருளாகிய சிவஞானத்தை விளங்கப் பெறுவது எக்காலம்?

உயிர் முதல்வனைக் காணுமைக்குக் காரணமாகிய மலமறைப்பு அநாதியே உள்ளது; இடையில் வந்ததன்று என்பது கருத்து.

---

## ௩. இருள்மல நிலை

[மூலமலம் எனப்படும் ஆணவத்தின் இயல்பு, முதன்மை பற்றி இருள் மலம் என்றுர். ஆயினும் இனம் பற்றி மாயை கன்மங்களின் இயல்புங் கூறப்படும்எனக் கொள்க.]

21. துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்
இன்றென்ப தெவ்வாறும் இல்.

துன்றும் பவத்துயரும் — பொருந்தியுள்ள பிறவித்துன்பமும், இன்பும் — (துயர்நீங்கிய பின் எய்தும்) பேரின்பமும், துணைப்பொருளும் — அவ்விரண்டிற்கும் துணையாக உள்ள பொருள்களாகிய மல மாயை கன்மங்களும் முதல்வனும், இன்று என்பது எவ்வாறும் இல் — இல்லை என்று துணிவது எவ்வாற்ருனும் இல்லையாம்.

அளவைமுறையான் ஆராயும்போது பிறப்பு வீடுகளும் அவற்றின் காரணமாகிய பாசமும் கடவுளும் உள்பொருள்கள் என்றே துணியப்படும் என்பது கருத்து.

22. இருளான தன்றி இலதெவையும் ஏகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

எவையும் ஏகப்பொருளாகி நிற்கும் பொருள் — எவற்றினையும் மறைத்து ஒரே பொருளாக்கி நிற்கும் பொருள், இருளானதன்றி இலது — இருளன்றி வேறு இல்லை.

எவையும் என்பதன் பின் மறைத்து என ஒரு சொல் வருவித்து உரைக்க.

பலவகைப் பொருளையும் தோன்ருதபடி மறைத்து நிற்கும் இருள் போலக் கடவுளையும் ஆன்மாவையும் பிறப்பு வீடுகளையும் இருவினைகளையும் தோன்ருதபடி மறைத்து நிற்பது மூலமலம் எனப்படும் ஆணவம் என்பது கருத்து.

23. ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது.

இருள் ஒரு பொருளுங் காட்டாது உருவங் காட்டும் — புறத்திருள் தனக்கு வேறான ஒரு பொருளையும் தோன்றாதபடி மறைத்து நின்று தன் உருவத்தை மட்டும் தோற்றுவிக்கும், இது இரு பொருளுங் காட்டாது — அக இருளாகிய ஆணவம் பிற பொருள்களையும் மறைக்கும் தன் இருப்பையும் காட்டாது.

உலகத்தில் இருள்வந்து உறும்போது அது கண்ணுக்குத் தோன்றுதலின் அதனை நீக்குதற்கு ஒளியைத் தேடுவர். அறியாமையை விளைவித்து நிற்கின்ற ஆணவம் தன் இருப்பையும் புலப்படுத்தாமையின் அதனை நீக்கிக்கொள்ள மக்கள் முயல்வதில்லை என்பது கருத்து. அக இருள் புற இருளினும் கொடியது.

24. அன்றளவி உள்ளொளியோ டாவி யிடையடங்கி
இன்றளவும் நின்ற திருள்.

இருள் ஆவி இடை உள்ளொளியோடு அன்று அளவி — அக இருள் உயிரின்கண் உள்ளொளியாகிய திருவருளோடு தானும் அநாதியே கலந்து, அடங்கி இன்றளவும் நின்றது — திருவருளைப் பற்றாமல் அடங்கி இதுவரை நீங்காது நின்றது.

25. பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
கணவர்க்குந் தோன்றாத கற்பு.

இருட் பாவைக்கு — அக இருளாகிய மகளுக்கு, பலரைப் புணர்ந்தும் — ஆன்மாக்கள் பலவற்றோடு கலந்து நின்றும், கணவர்க்குந் தோன்றாத கற்பு — தன் தலைவர்களாகிய ஆன்மாக்களுக்கும் புலப்படாது நிற்றற்கு ஏதுவாகிய கற்பு நெறி, என்றும் உண்டு — திருவருள் பெறும்வரை எஞ்ஞான்றும் உண்டு.

கற்புடையவள் தன் கணவனுக்குப் புலப்பட்டுத் தோன்றிப் பிறர் கண்ணில் தோன்றி நில்லாள். இவ்விருள் எல்லா உயிர்களையும் மணந்தும் யாருக்கும் தன்னைக் காட்டுவதில்லை. திருவருள் பெற்றார்க்கன்றி ஆணவத்தின் உண்மை விளங்குவதில்லை. பிற சமயங்களில் ஆணவம் என்ற ஒரு பொருளைக் கொள்ளாததற்கு இதுவே காரணம்.

26. பன்மொழிகள் என்உணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது.



பன்மொழிகள் என் — பல சொற்களால் சொல்ல வேண்டுவதில்லை, உணரும் பான்மை தெரியாத தன்மை — ஆன்மாக்களது உணரும் இயல்பினை விளங்கவொட்டாது தடுத்தல், இருளார் தந்தது — அக இருளால் வந்த விளைவு.

27. இருள்இன்றேல் துன்பேன் உயிரியல்பேல் போக்கும்
பொருள்உண்டேல் ஒன்றாகப் போம்.

இருள் இன்றேல் துன்பு ஏன் — அக இருள் இல்லையாயின் உயிர்களுக்குப் பிறவித் துன்பம் ஏன் வருகின்றது? உயிர் இயல்பேல் — அது உயிருக்கு இயல்பாகிய குணம் என்றால், போக்கும் பொருள் உண்டேல் ஒன்றாகப் போம் — இருளைப் போக்கும் பொருள் ஒன்று உண்டாயின் இருளாகிய குணம் அழியும்போது குணியாகிய உயிரும் ஒருங்கே அழிந்துபடும்.

இதனால் அக இருள் என்பது உள்பொருள் என்பதும் அது உயிரின் குணமாதல் இன்றி நெல்லிற்குள்ள உமிபோல உயிருக்கு அநாதியே உள்ள குற்றம் ஆம் என்பதும் கூறப்பட்டன.

குற்றம் நீக்கப்படும்போது பொருள் இருக்கும்; குணம் நீங்கும்போது பொருளும் அழிந்துவிடும், சூடு நீங்கியவழி அதன் குணியாகிய நெருப்பு அழிவதுபோல.

28. ஆசாதி யேல்அணைவ காரணம்என் முத்திநிலை
பேசாது கவ்வும் பிணி.

ஆசு ஆதியேல் — உயிரின் குற்றமாகிய ஆணவமலம் ஒருகாலத்து வந்து கூடியதெனின், அணைவ காரணம் என் — தூய உயிரை மலமாகிய அழுக்கு வந்து பொருந்துதற்குக் காரணம் யாது? முத்தி நிலை பிணி பேசாது கவ்வும் — காரணமின்றி வந்தது எனின் வீடுபேற்றின் கண்ணும் துன்பத்திற்குக் காரணமாகிய அம் மலம் காரணமின்றி உயிரை வந்து கவர்ந்துகொள்ளும் அன்றோ! எனவே ஆணவப் பிணிப்பு அநாதி என்றபடி.

29. ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலா திருள்.

ஒன்று மிகினும் — ஒளி இருள் என்ற இரண்டனுள் ஒன்றாகிய இருள் மிகுந்திருந்தாலும், உள்ளம் ஒளி கவராதேல் — ஆன்மா ஒளி

யைக் கவரமாட்டாது என்றால், இருள் என்றும் அகலாது — இருள் எக்காலத்தும் நீங்காது.

இருள் உள்ள காலத்து விளக்கொளி வருமாயின்அவ்வொளியைக் கண் ஏற்றுக்கொள்ளும். அதுபோல ஆணவ இருளில் அழுந்தி நிற்கும் ஆன்மாவிற்கு மாயையின் காரியமாகிய விளக்கை இறைவன் தருகின்றான். உயிர் மாயா காரியங்களைப் பற்றி நின்று அறியாமையின் நீங்கிச் சிறிது அறிவு விளங்கப் பெறுகிறது. இங்ஙனம் ஒளியைப் பற்றும் இயல்பு உயிருக்கு இருத்தலால் ஆணவ மலத்தின் வலி முற்றையும் கெடுக்கும் பேரொளியாகிய சிவஞானத்தையும் அது பற்றும் என உணரலாம்.

30. விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.

மாயை — மாயையின் காரியங்கள், கன்மத்து — உயிர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஈடாக, வடிவு ஆதி வந்து — உடம்பு முதலியனவற்றைப் பொருந்தி நின்று, விடிவு ஆம் அளவும் விளக்கு அனைய — ஞான உதயமாகிய பகல் வரும் அளவும் விளக்கொளியைப் போன்று உதவி செய்யும்.

மாயை — ஆகுபெயர். வடிவு — தனு எனப்படும் உடம்பு. வடிவு ஆதி — தனு கரண புவனபோகங்கள்.

## ச. அருளது நிலை

[முதற் பொருளின் குணமாகவும் சொரூபமாகவும் உள்ள கருணை உருவாகிய சிவஞானத்தின் இயல்பு.]

31. அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளில் தலையிலது போல்.

வேண்டும் பொருளில் தலை இலது போல் — (ஒருவனுக்கு ஒரு சமயத்தில்) வேண்டப்படும் பொருளைப் பார்க்கிலும் சிறந்த பொருள் பிறிதொன்று இல்லையாதல் போல, அகிலத்து அருளில் பெரியது இல் — (எல்லார்க்கும் எஞ்ஞான்றும்) உலகத்தின்கண் திருவருளினும் மேலான பொருள் ஒன்று இல்லை.

நீர் வேட்கை உடையானுக்கு அச்சமயத்தில் தண்ணீரே வேண்டற் பாலது. வேறு சிறந்த உணவோ பொருளோ கிடைப்பினும் அது அவனால் விரும்பப்படமாட்டாது. அதுபோலப் பெறத்தகும் பேறுகளுள் திருவருட்பேறே நன்மைதரும் என்பது கருத்து.

32. பெருக்க நுகரவினை பேரொளியாய் எங்கும்
அருக்கன்என நிற்கும் அருள்.

அருக்கன் என — மக்கள் பொருள்களை ஈட்டவும் பின் நுகரவும் துணைபுரிந்து நிற்கும் சூரியனைப்போல, அருள் வினை பெருக்க நுகர பேரொளியாய் எங்கும் நிற்கும் — திருவருள் உயிர்கள் வினையைப் பெருக்கிக் கொள்ளவும் அதன் பயனை நுகரவும் துணைசெய்து பேரறிவாய் எவ்விடத்தும் நிலைபெறும்.

33 ஊன்அறியா தென்றும் உயிர்அறியா தொன்றும்இவை
தான்அறியா தார்அறிவார் தான்.

என்றும் ஊன் அறியாது — உயிர்களுக்கு உடம்பாய் நிற்கும் தத்துவங்கள் அறிவில் பொருள்கள் ஆதலின் அவை என்றும் வினைப் பயனை அறிந்து நுகரா, உயிர் ஒன்றும் அறியாது — உயிரும் அறிவுடையதாயினும் அறிவித்தாலன்றி அறியாமையால் உண்டாய வினைப்பயனைத் தானே அறிந்து நுகராது. இவைதான் அறியாது யார்

அறிவார் — (ஆதலால்) வினைப்பயன்களை முதல்வன் அறிந்து நுகர்வித்தால் அன்றி எவ்வுயிர் தானே அறிந்து நுகரும்? ஈற்றிலுள்ள தான் அசை.

மேலைப்பாட்டில் வினைகளைப் பெருக்குதற்கும் நுகர்தற்கும் திருவருள் உதவுகின்றது என்றதனை இங்குக் காரணம் காட்டி விளக்குகின்றார். வினையை நுகரும்போது விருப்பு வெறுப்புடன் முயற்சி செய்ய வேண்டுதலின் அம்முயற்சியே மேலைக்கு வினையும் ஆம். ஆதலால் நுகர்தற்குத் திருவருள் அறிவிக்கவேண்டும் என்றமைகொண்டே வினையைப் பெருக்குதற்கும் அத்திருவருளே காரணம் ஆகின்றது என்பது பெறப்படும்.

34. பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாழும் மறுத்து.

அருள் உயிர்கள் — அருளையே தாரகமாகக் கொண்டுள்ள உயிர்கள், மறுத்து — அவ்வருளை அனுபவியாது, மால் ஆழி ஆழும் — மாயாகாரியங்களால் விளையும் மயக்கமாகிய கடலில் ஆழ்ந்து நிற்கும்; இது எத்தன்மைத்து என்றால், மீன் பால் ஆழி ஆளும் பான்மைத்து — பாற்கடலிலுள்ள மீன் அதனை அனுபவியாத தன்மையை ஒக்கும்.

பாற்கடலிலுள்ள மீன் பாலை உண்ணும் பொருளென்று அறியாமையினால் அதனைப் பருகாது, அதன்கண் வாழ்கின்ற சிறிய பிராணிகளை வருந்தித்தேடி உண்ணும். ஆளும் என்றது — இகழ்ச்சிக் குறிப்பாய்ப் பயன்கொள்ளாமையைக் குறிக்கின்றது.

35. அணுகு துணையறியா ஆற்றோனில் ஐந்தின்
உணர்வை உணரா துயிர்.

அணுகு துணை அறியா ஆற்றோனில் — ஒருவன் தனக்குத் துணையாக உடன் வரவும் அவனை அறியாது செல்லும் வழிச்செல்வோனைப்போலவும், ஐந்தின் — தம்மைச் செலுத்தி நிற்கும் உயிரை அறியமாட்டாத ஐம்பொறிகளைப் போலவும், உயிர் உணர்வை உணரா — உயிர்கள் தம் உணர்வின் முதலாக உள்ள திருவருளை உணரமாட்டா.

முதல்வன் உயிர்க்குயிராய் நின்று உணர்த்திவரினும் உயிர் அம்முதல்வனை அறிவதில்லை எனக் கூறுகின்றது இப்பாட்டு.



36. தரையை அறியாது தாமே திரிவார்
புரையை உணரா புவி.

தரையை அறியாது தாமே திரிவார் புரைய — தமக்கு ஆதாரமாய் உள்ள தரையை ஆதாரம் என எண்ணாது தாமே தமக்கு ஆதாரம் என எண்ணித் திரிவாரைப்போல, புவி உணரா — உயிர்கள் தமக்கு ஆதாரமாகிய திருவருளை ஆதாரம் என்று உணரமாட்டா.

புரைய — உவம உருபு. புவி — இடவாகுபெயர், புவியின்கண் உள்ள உயிர்களை உணர்த்திற்று. உணரா என்பதற்குச் செயப்படு பொருள் வருவித்து உரைக்கப்பட்டது.

37. மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். [ஞானம்

ஞானம் தலைகெடுத்தோர் — (தமக்கு ஆதாரமாகவும் உடனின்று செலுத்துவதாகவும் பொருள்களை விளக்குவதாகவுமுள்ள) ஞானமாகிய அருளைக் காணலுறாது இழந்தோர், மலை கெடுத்தோர் — மலை தோன்றி நிற்பவும் அதனைக் காணாது இழந்தோர் போல்வர், மண் கெடுத்தோர் — நிலம் ஆதாரமாக இருப்பவும் அதனைக் கருதாதவரோடு ஒப்பர், வான் கெடுத்தோர் — ஆகாயம் உலவுதற்கு இடம் கொடுத்து நிற்பவும் அதனை எண்ணாதவரை ஒப்பர். தாம் தற்கேடர் — அவர் தாமே தமக்குக் கேட்டை விளைவித்துக் கொள்வோர் ஆவர்.

திருவருளை மறத்தல் கேடு பயக்கும் என்பது கருத்து.

38. வெள்ளத்துள் நாவற்றி யாங்கு விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்.

கள்ளத் தலைவர் கடன் — தமக்கு முதன்மை இல்லாது இருக்கவும் தம்மை முதல்வர் எனக் கருதும் உயிர்களது இயல்பு, வெள்ளத்துள் நாவற்றி யாங்கு — கழுத்தளவு நீரில் நிற்கும் ஒருவன் அந்நீரைப் பருகாது நாக்கு வறண்டு நின்றாற்போல, விடிந்து இருளாம் — விடிந்த பொழுதும் இருளாய் நிற்கும் தன்மை போன்றது.

உயிர்கள் திருவருளை அறியாது நிற்றல் உயிர்களது குறையே ஆம் என்பது கருத்து. அக்குறை மூலமல சம்பந்தத்தால் உண்டாயிற்று எனக் கொள்க.

39. பரப்பமைந்து கேண்மின்இது பாற்கலன்மேற் பூளை
கரப்பருந்த நாடும் கடன்.

பரப்பு அமைந்து கேண்மின் — மனம் பல தலைப்படப் பரவுதலை விடுத்து ஒரு நெறிப்பட்டு யாம் சொல்வதைக் கேளுங்கள், இது — திருவருள் சார்பாக அமைந்திருக்கவும் அதனை அறியாமல் உலகத் துப் பொருள்களிலிருந்து இன்பத்தைப் பெறக் கருதுதல், பாற் கலன்மேல் பூளை — உறியில் வைக்கப்பட்டுள்ள பால் நிறைந்த பாத் திரத்தின் மேலுள்ள பூனை, கரப்பு அருந்த நாடும் கடன் — (அப் பாலைப் பருக நினையாது) சுவரின் மீது காணப்படும் கரப்பான் என் னும் பூச்சியை உண்ணுதற்குக் கருதும் முறைமையை உடையது.

கரப்பு — பகையைக் கண்டவுடன் ஓடி ஒளித்துக்கொள்ளும் ஒரு பூச்சி.

திருவருளால் பெறுவது நிலைத்த பேரின்பமாம். உலகத்துப் பொருள்களால் வருவது உறுதியற்ற சிற்றின்பமாம் என்பது கருத்து.

40. இற்றைவரை இயைந்தும் ஏதும் பழக்கம்இல்லா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

இற்றைவரை இயைந்தும் — அநாதி தொடங்கி இன்றளவும் திருவருளோடு கலந்து நின்றும், ஏதும் பழக்கமில்லா — சிறிதும் அதில் தோய்ந்து பழகுதல் இல்லாத, வெற்றுயிர்க்கு — பயன் கொள்ளாத உயிர்க்கு, வீடுமிகை — பேரின்பத்தைத் தரும் வீடு இருந்தும் அது வேண்டப்படாத தொன்றே ஆம்.

திருவருளை உள்நோக்கி உணர்வார்க்கன்றி வீடுபேறு கிடைத்தல் இல்லை என்பது கருத்து.

---

## ரு. அருளுரு நெறி

[திருவருளினால் காணப்படும் உருவ[illegible] இயல்பு.]

41. அறியாமை உள்நின் றளித்ததே காணும்
குறியாகி நீங்காத கோ.

காணும் குறியாகி நீங்காத கோ — கண்ணாற் காணும் வடிவினை உடையதாகி விட்டுப் பிரியாது நிற்கின்ற ஞானகுரவன், அறியாமை உள்நின்று அளித்ததே — இதுவரை அறியப்படாதபடி உயிர்க்குயிராய் நின்று உதவி செய்துவந்த திருவருளே ஆகும்.

திருவருளே குரு வடிவாய்த் தோன்றும் என்பது கருத்து.

42. அகத்துறுநோய்க் குள்ளினர் அன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்.

அகத்து உறுநோய்க்கு உள்ளினர் அன்றி — உள்ளே இருக்கும் உயிருக்குள்ள நோயின் இயல்பை உயிர்க்குயிராய் இருக்கும் இறை வன் அறிவதன்றி, அதனைச் சகத்தவரும் காண்பரோ — அந்நோயின் இயல்பை உலகிலுள்ள பிறர் அறியவல்லரோ? அறியார்.

நோய்க்கு — நோயின் இயல்பை; உருபு மயக்கம். நோய் — ஆகுபெயர். தான் — அசை நிலை.

வீட்டில் ஒருவர் கொண்ட நோயை அவ்வீட்டினரன்றி வெளி யில் உள்ளார் அறிவரோ எனவும் உரைத்து உவமையாகக் கொள்க.

43. அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருள்ஆர் அறிவார் புவி.

அருளா வகையால் — இதுகாறும் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு என்னும் அருளுக்கு வேறான செயல்களைத் தோன்றாது நின்றே செய்து வந்தாற்போல, அருள்புரிய வந்த பொருள் — அருளை யும் குரு வடிவின்பின் மறைந்து நின்று அன்பினால் செய்ய வந்த மெய்ப்பொருளின் உயர்ச்சியை, புவி ஆர் அறிவார் — உலகத்தின்கண் சத்திநிபாதரன்றி அறிய வல்லார் பிறர் யார்?

முதல்வன் செய்யும் ஐந்தொழில்களுள் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு என்னும் நான்கும் பந்தம் என ஒன்றாய் அடங்கும். ''பந்தம் வீடு தரும் பரமன்'' என்பது பெரிய புராணம். இவற்றுள் பந்தம் என்பது மலபரிபாகம் வருதற் பொருட்டு உயிர்களைப் பிறப்பு நிலையில் வைத்துச் சுழற்றுதல். பந்தம் — கட்டு. வீடு என்பது — பந்தத்தினின்றும் விடுவித்தல். இவ்விரண்டையும் உயிர்களுக்கு நிகழ்த்துபவன் முதல்வனே. அவற்றுள் பந்தம் தருதல், மறைத்தல் அல்லது அருளாமை எனப்படும். வீடு தருதல், அருளுதல் எனப்படும். அருளாமையாகிய பந்தத்தை விளைத்து வந்தபோது முதல்வன் தோன்றாத் துணையாகவே இருந்து வந்தான். அதுபோல வீடு தரும் அருளுதற்கண்ணும் குருவடிவின் பின்னாகத் தோன்றாது நின்றே உதவுகிறான் என்பது கருத்து. திருவருள் கைவரப் பெற்றார்க்கு அன்றி ஞானகுரவனை முதல்வன் எனத் தெளிதல் கூடாது என்பது கருத்து. மாணிக்கவாசகர் தமக்கு அருள்புரிந்த குரவனைச் ''சிவன் என யானும் தேறினன் காண்க'' என்றமை கருதத் தக்கது. திருஞானசம்பந்தர் முதலாயினாரை இறைவனது அருள் உரு என உணரமாட்டாத பிற சமயத்தவரது அறியாமையினையும் இங்குக் கருதுக.

44. பொய்இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்இரண்டும் காணார் மிக.

பொய் — நிலையாத உலக வாழ்க்கையினையும், இருண்ட சிந்தை — அறியாமை நிறைந்த சித்தத்தினையும் உடைய, பொறியிலார் — ஞானமாகிய திரு அற்றவர்கள், போதமாம் — ஞானமயமாகிய அருளும், மெய் — அவ்வருளின் உருவமாகிய தேசிக வடிவும், இரண்டும் — ஆகிய இரண்டினையும், மிக காணார் — சிறிதும் அறியமாட்டார்.

இப்பாட்டு மேற்கூறியதனை அறியாதார் இன்னார் எனக் கூறுகின்றது.

45. பார்வையென மாக்களை முன்பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

பார்வையென — விலங்குகளையும் பறவைகளையும் பிடித்தற் பொருட்டு அவ்வவற்றின் வடிவால் செய்த பார்வைப் பிராணிகளைப் போல, மாக்களை — அறியாமையில் அழுந்தி உள்ள ஆன்மாக்களை, முன்பற்றிப் பிடித்தற்கு ஆம் — முன்னே வசப்படுத்திப் பின்னர் அகப்படுத்திக் கொள்ளுதற்கு உதவுகின்ற, போர்வை என — மாறு வேடந்தான் குரு வடிவு என, புவி — உலகத்தவர், காணார் — அறியமாட்டார்.



மெய்கண்டதேவர், உய்யவந்ததேவர் முதலிய அருளாசிரியன்மாரைச் சிவனே எனத் தெளிந்து உறுதி பெற்றார் சிலரேயாகவும் பலர் அவ்வாறு தெளியாமையையும் இங்குக் கருதுக.

46. எமக்கென் எவனுக்கெவை தெரியும் அவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

எவை எவனுக்குத் தெரியும் — எந்தெந்த நூல்கள் எவனுக்குத் தெரியுமோ, அவ்வத் தமக்கு அவனை வேண்ட — அவை அவை தம்மை விளக்குதற் பொருட்டு அவனை வேண்டுதலால், எமக்கு என் — நூல்களைப் பெற்றுள்ள எமக்கு ஞானாசிரியனால் வருவது யாது என்னும் வினாவை, தவிர் — விடுக.

ஞான நூல்களின் பொருளை உண்மையாக உணர்ந்தவன் ஞான ஆசிரியனே ஆவன். பிறர் சொற்பொருளை உணர்ந்தாரேனும் அநுபவத்தை உணரமாட்டார். ஆதலால், கேள்வியோடு அநுபவமுடைய தேசிகன் ஞானநூற் பொருளைச் சிந்தித்து உணர்தற்கு இன்றியமையாதவன் என இப்பாட்டுக் கூறுகின்றது. அவ்வத் தமக்கு — அவை அவை தமக்கு. பின்னர் அவ்வ அவை என வருதலின் முன்னுள்ள எவை என்பதற்கு எவை எவை என அடுக்காகக் கொண்டு பொருள் உரைக்கப்பட்டது.

எந்தநூற் பொருள் யார்க்கு அநுபவமோ அந்தநூலை அவர்பாற் கேட்க. உலகியல் பற்றிய நூல்கள் நம்மனோர்க்கு உலக அநுபவம் இருத்தலின் ஆசிரியன் இன்றியும் பொருள் விளங்கி நிற்கும். உபதேச நூல்கள் அத்தன்மையன அல்ல என்பது கருத்து.

***இக் குறட் பாடலுக்குப் பின்வருமாறு பொருள் கொள்ளுதல் சிறப்பு:***

எவனுக்கு எவை தெரியுமோ அவை தமக்கு அவனையே வேண்டுதல் உலகத்தின்கண் காணக் கிடத்தலின் ஆசாரியனைத் தவிர்தல் எமக்கு எங்ஙனம் கூடுவது?

நூல்களே அமையும்; ஆசிரியன் எதற்கு? என்பாரை மறுத்து உலகில் நூல்கள் எல்லாம் கருவியே யாகலின் அந்தந்த நூற்பொருளை உணர்ந்தோர் துணையின்றி அந்நூல்கள் பயன்படா. அதுபோல

ஞான நூல்களும் ஞானகுரவன் இன்றிப் பொருட்டெளிவைத் தர மாட்டா என்பது கருத்து. அவைதமக்கு என்பது அவ்வத்தமக்கு எனத் திரிந்து நின்றது. தவிர் — முதனிலைத் தொழிற் பெயர்.

47. விடநகுலம் மேவினும்மெய்ப் பாவகனின் மீளும்
கடனிலிருள் போவதிவன் கண்.

விடம் — ஒருவனுக்குப் பாம்புக் கடியால் ஏறியவிடம், நகுலம் மேவினும் — பாம்புக்குப் பகையாகிய கீரி பக்கத்தில் வந்தாலும், நீங்காது. மெய்ப் பாவகனின் மீளும் கடனில் — அதன் உருவை மந்திரத்தோடு பாவித்துச் சித்தி பெற்றவனது நோக்கினால் மட்டும் இறங்கும் முறைமை போல, இருள் போவது இவன்கண் — உயிர்க்குயிராய்த் திருவருள் உடன் நின்றும் அதனால் ஆணவ மலத்தின் ஏற்படாது அத் திருவருளின் உருவாகிய ஞானாசாரியனது நீக்கம் திருக்கண் நோக்காலேதான் ஏற்படும்.

இருள் போவது இவன் கண்ணால் என முடிக்க.

48. அகலர்த் தரும்அருளை ஆக்கும்வினை நீக்கும்
சகலர்க்கு வந்தருளும் தான்.

சகலர்க்கு வந்தருளும் தான் — கலையோடு கூடிய மும்மலம் உடையார்க்கு ஆசிரியனாய் வந்து பலவகையாலும் பசுத்துவ நீக்கம் செய்கின்ற முதல்வன், — கலையின் நீங்கியோராகிய விஞ்ஞானகலர் பிரளயாகலர்களுக்கு, தரும் அருளை ஆக்கும் வினை நீக்கும் — தான் ஆசிரியனாய் வாராமலே முறையே சிவத்துவத்தை வழங்கும் அருள் நோக்கைச் செய்யும், வினையாகிய பந்தத்தை நீக்கும்.

அகலர் என்ற இடத்து குவ்வுருபு விகாரத்தால் தொக்கது. அகலர் இருவருள் விஞ்ஞானகலர்க்குத் தன்மையில் நின்றும் பிரளயாகலர்க்குச் சுதந்திரத் திருமேனி காட்டி முன்னிலைப்பட்டும் அருள் புரியும் என உரையிற் கோடல் என்னும் உத்தியாற் கொள்க. வினை நீக்கம் என்றதன் ஆற்றலால் வினை நீக்கிச் சிவத்துவ விளக்கம் செய்யும் என உரைத்துக் கொள்க.

இப்பாட்டின் மூலம்

**அகலர்க் கருமருளை யார்க்கும் வினைநீக்கும்**
**சகலர்க்கு வந்தருளும் தான்**

என்றிருத்தல் கூடும்.



சகலர்க்கு (ஆதாரன் ஆகி) வந்து அருளும் முதல்வன் ஏனை அகலர் இருவருக்கும் (விஞ்ஞானகலர், பிரளயாகலர்) முறையே நீக்குதற்கரிய மருளையும் பிணித்து நிற்கும் வினையையும் நீக்கும் என்பது உரை. மருள் — மலம். ஆக்கும் என்பதே பாடமாயின் ஆக்கப்படும் வினை என உரைக்க.

49. ஆர்அறிவார் எல்லாம் அகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்.

எல்லாம் அகன்ற நெறி அருளும் — மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்னும் ஆறு அத்துவாக்களையும் கடந்த நிலைக்கண்ணதாகிய ஞானநெறியை அருளுதற்கு ஏதுவாகிய, பேரறிவான் வாராத பின் — முற்றுணர்வுடைய முதல்வன் மூவகையாலும் நேர்பட வாராத இடத்து, ஆர் அறிவார் — எந்த உயிர் அவனை அறியக்கூடும்? எவ்வுயிரும் அறியாது என்றபடி.

வருதலாவது விஞ்ஞானகலர்க்கு முன்னை மருட் பார்வையை மாற்ற அருட் பார்வையான் நோக்குதலும், பிரளயாகலர்க்குத் தேவ குருவால் முன்னின்று திருநோக்கு பரிசம் வாசகம் என்பவற்றால் அருளுதலும், ஏனைச் சகலர்க்கு மானுட குருவிற்குப் பின்னாக நின்று திருநோக்கு பரிசம் வாசகம் பாவனை நூல் யோகம் ஔத்திரி என்பவற்றால் அருளுதலுமாம்.

50. ஞானம் இவன்ஒழிய நண்ணியிடும் நற்கல்அனல்
பாநு ஒழியப் படின்.

நற்கல் பாநு ஒழிய அனல் படின் — மாசில்லாத சூரிய காந்தக் கல்லினிடத்து சூரியன் முன்னிலையிலன்றி நெருப்புத் தோன்றுமாயின், ஞானம் இவன் ஒழிய நண்ணியிடும் — ஒருவன் அறிவின்கண் ஞானகுரவன் முன்னிலையில் அன்றிச் சிவஞானம் விளங்கித் தோன்றும்.

சூரியன் முன்னிலையிலேதான் சூரியகாந்தக் கல்லில் நெருப்புத் தோன்றும்; அதுபோல ஞானகுரவன் திருமுன்புதான் ஆன்மாவின் கண் சிவஞானம் வெளிப்பட்டுப் பாச நீக்கத்தைச் செய்யும்.

## ௬. அறியும் நெறி

*[மெய்யை உணரும் முறைமை.]*

### 51. நீடும் இருவினைகள் நேராக நேராதல்
### கூடும்இறை சத்தி கொளல்.

*நீடும் இருவினைகள்* — தொன்று தொட்டு வளர்ந்து வருகின்ற புண்ணிய பாவங்களும் அவற்றின் பயன்களும், *நேராக நேராதல்* — ஒருவனது அறிவின்கண் சமமாகக் காணும் இருவினையொப்பு நிலையில், *இறை சத்தி கொளல்* — இறைவனுடைய திருவருளைக் கொள்ளும் இயல்பு, *கூடும்* — நிகழும்.

நேராதற்கண்கூடும் என முடிக்க. ஒருவன் அறிவின்கண் இருவினை ஒப்பாகிய அடையாளம் தோன்றும்போது சத்திநிபாதம் நிகழும் என்பது கருத்து. இருவினை ஒப்பாவது புண்ணிய பாவங்களையும் அவற்றின் பயன்களையும் பிறவிக்குக் காரணமானவை எனக் கண்டு ஒப்பநோக்கி அவற்றை வேண்டாது நிற்றல். அத்தகைய சமன்நிலை வந்தவனது அறிவின்கண் முதல்வனுடைய திரோதான சத்தியானது அருட்சத்தியாக மாறிப் பாசப்பற்று நீங்கும்படி செய்யும். அது சத்திநிபாதம் எனப்படும்.

*பாதம்* — வீழ்ச்சி. மல மறைப்பு நீங்கித் திருவருட் சத்தி பிரகாசிக்கும் என்றபடி.

### 52. ஏகன் அநேகன் இருள்கருமம் மாயைஇரண்
### டாகஇவை ஆறாதி யில்.

*ஏகன்* — ஒருவனாகிய முதல்வன், *அநேகன்* — பலவாகிய உயிர்கள், *இருள்* — அறிவை மறைத்து நிற்கும் மூலமலம், *கருமம்* — இன்பத் துன்பங்களுக்குக் காரணமாகிய கன்மம், *மாயை இரண்டு* — சுத்த மாயை அசுத்த மாயை என்னும் இரு மாயைகள், *ஆக இவை ஆறு* — ஆக இவை ஆறு பொருள்களுக்கும், *ஆதி இல்* — தொடக்கம் இல்லை.

இவை ஆறும் அநாதி என்பது கருத்து.

ஆறு என்றது ஆறனுக்கும் எனப் பொருள்படும். நான்கன் உருபுசாரியை முற்றும்மை விகாரத்தால் தொக்கன.



இந்த ஆறு பொருளினுடைய உண்மையும் உணர்ந்தார்க்கே சிவஞானம் விளங்கும் என்றபடி.

பிற சமயத்தவர் இப்பொருள்களுள் ஒன்றையோ பலவற்றையோ கொள்ளாது பிழைபடுவர்.

### 53. செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
### உய்வான் உளன்என் றுணர்.

*உய்வான்* — நீ உய்தற் பொருட்டு, *செய்வானும்* — வினைகளைச் செய்யும் உயிரும், *செய்வினையும்* — செய்யப்படும் நல்வினை தீவினைகளும், *சேர்பயனும்* — அவற்றால் வந்து சேரும் பயனாகிய இன்பத் துன்பங்களும், *சேர்ப்பவனும்* — அவற்றை உயிருக்கு அணைக்கும் முதல்வனும், *உளன் என்று உணர்* — ஆகிய இந்நால்வகைப் பொருளையும் யான் உடையேன் என்று உணர்ந்து கொள்க.

ஏனைச் சமயத்தவர் இவற்றுள் ஒன்றோ, இரண்டோ, மூன்றோ கொண்டு பிறவற்றைக் கொள்ளார். உலகாயதர் செய்வோனை உடம்பாகக் கொண்டு பிறவற்றைக் கொள்ளார். மேலை நாட்டுச் சமயங்கள் உயிரையும் கடவுளையும் கொண்டு பிறவற்றைக் கொள்ளார். பௌத்தர் வினையும் வினைப் பயனுங் கொண்டு பிறவற்றைக் கொள்ளார். சைனர் முதல் மூன்றனையும் கொண்டு சேர்ப்பவனைக் கொள்ளார். நான்கு பொருளையும் நன்கு உணர்ந்தார்க்கே முத்தி நெறி அறியப்படும் என்பது.

### 54. ஊன்உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனோடுயிர்
### தான்உணர்வோ டொன்றும் தரம்.

*ஊனோடுயிர் உணர்வோ டொன்றும் தரம்* — உடம்போடு கூடிய உயிர் பேருணர்வாகிய முதல்வனைத் தனக்கு உயிராகக் கொண்டு ஒற்றுமைப்பட்டு நிற்கும் தன்மை, *ஊன் உயிரால் வாழும் ஒருமைத்து* — உடம்பு உயிரினால் செலுத்தப்பட்டு அதனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கும் அபேதநிலையினை உடைத்து.

முதல்வன் உயிர்களோடு கலந்து அபேதமாய் நிற்கும் தன்மை உயிர் உடம்போடு கலந்து அதுவேயாய் நிற்கும் தன்மையை ஒக்கும் என்பது கருத்து.

### 55. தன்நிறமும் பல்நிறமும் தானாம்கற் றன்மைதரும்
### பொன்நிறம்போல் மன்நிறம்இப் பூ.

தன்நிறமும் — பளிங்கினது தன்னியல்பும், பல்நிறமும் — அதைச் சார்ந்துள்ள பொருள்களின் பல நிறங்களும், தானும்கல் — தன்னுடையதாகவே கொண்டு நிற்கும் பளிங்குக் கல்லுக்கு, தன்மை தரும் பொன்நிறம் போல் — அத்தன்மையைக் கொடுக்கும் சூரியனது ஒளியைப் போல, இப்பூ — இப்பூமியின்கண் உள்ள உயிர்களுடைய தன்னியல்பும் பொதுவியல்பும், மன்நிறம் — முதல்வனுடைய திருவருளால் விளங்குவதே ஆம்.

கல் — பளிங்குக் கல். பொன் — பொன்னிறமுள்ள சூரியன். மன் — நிலைபெற்ற பரம்பொருள்.

ஒரு பளிங்கு அதன் பக்கத்தில் உள்ள பொருளின் நிறத்தைப் பற்றி அப்பொருள் போல விளங்கும்போது அவ்விளக்கம் அதன் பொது இயல்பு எனப்படும். அது பிறபொருளின் சார்புபற்றி உள்ளதாதலால் செயற்கை எனவும்படும், அங்ஙனமன்றி ஞாயிறு உச்சியில் வரும்போது பளிங்கைச் சுற்றிப் பல பொருள்கள் இருப்பினும் பளிங்கு அவற்றின் நிறங்களைப் பற்றாமல் தன் ஒளியையே தோற்றி நிற்கும். அவ்வியல்பு அதன் உண்மை இயல்பு அல்லது தன்னியல்பு எனப்படும். இவ்வாறு பளிங்குக்குள்ள தன்னியல்பும் பொதுவியல்பும் ஞாயிற்றின் ஒளியால் விளங்குவனவே ஆம். அதுபோல ஆன்மாவிற்கும் பொதுவியல்பு தன்னியல்பு என்னும் இரண்டு இயல்புகள் உள்ளன. ஆன்மா உடம்பைச் சார்ந்து ஐம்பொறி முதலிய கருவிகளே தான் என்னும்படி ஏகதேசப்பட்டு அக்கருவிகளேயாய்த் தோன்றும் இயல்பு அதற்குப் பொதுவியல்பு. இனிக் கருவிகளினின்றும் நீங்கி முதல்வன் திருவருளையே சார்பாகப் பெற்று நிற்கும் நிலையில் அதன் வியாபக இயல்பு விளங்கும். அவ்வியல்பு தன்னியல்பு எனப்படும். உயிர் தத்துவங்களைச் சாரும்பொழுதும் திருவருள் திரோதானசத்தி ரூபமாய் நின்று உயிரின் அறிவு தத்துவங்களைப் பொருந்தி விளங்கச் செய்யும். ஆதலினால் பளிங்கிற்குத் தன்னியல்பும் பொதுவியல்பும் சூரியன் ஒளியால் விளங்குவது போலவே ஆன்மாவிற்குப் பெத்தநிலையில் உள்ள பொதுவியல்பும் முத்திநிலையில் விளங்கும் தன்னியல்பும் இறைவன் திருவருளாலேயே விளங்குகின்றன என்கிறது இப்பாட்டு.

56. கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி
உண்டில்லை யல்லா துயிர்.

கண்டு — தனக்கு வேறாகிய தத்துவங்களின் செயலை இது இது எனக் கண்டு அவற்றின் நீங்கி, ஒல்லை காணும் நெறி — விரைவாகத் தன்னியல்பை உணரும் ஞானநெறியின்கண், கண் உயிர் நாப்பண் — அவ்வாறு தன்னியல்பைக் கருதி நிற்கின்ற உயிரின் அறிவில், ஒளி நிலை உண்டு — உயிரைத் தெளிவிக்கும் திருவருளாகிய ஒளி நிற்றல் உண்டு, அல்லது (காணு நெறி) இல்லை — இவ்வாறன்றி ஆன்மா தன்னை உணருமாறு இல்லை.



உயிர் தான் யார் என ஆராய்ந்து தனக்கு வேறான தத்துவங்களை இது இது எனக் கண்டு அவற்றை விட்டுச் செல்வதே தன்னியல்பைக் காணுதற்குரிய நெறியாகும். அந்நெறியில் உயிரின் அறிவு ஆராய்வதாய் நின்று தெளியமாட்டாதாய் நிற்கும். அங்கு உயிர்க்குயிராய் உள்ள திருவருளே தெளிவிக்கும் அறிவாய் அவ்வுயிரின்கண் வெளிப்படும். அத்திருவருளின் வெளிப்பாடு இல்லையாயின் ஆன்மா முதல்வனையும் உணராது என்பது கருத்து.

கண் உயிர் — கருதி உணரும் உயிர்; வினைத்தொகை.

கண்ணுதல் — கருதுதல், ஆராய்தல்.

57. புன்செயலின் ஓடும் புலன்செயல்போல் நின்செயலை
மன்செயல தாக மதி.

புன்செயலின் — ஆன்மாவினது அற்பமான அறிவினாலே, புலன் ஓடும் செயல்போல் — ஐம்புலன்களில் ஓடுகின்ற ஐம்பொறிகளின் செயலைப் போல, நின்செயலை — உன்னுடைய செயல்களை, மன் செயலதாக மதி — முதல்வனுடைய அருளாற்றலால் செலுத்தப்பட்டு நிகழும் செயலாகக் கருதி உணர்க.

பொறிகளைச் செலுத்தும் உயிர்போல உயிரை முதல்வன் செலுத்தி நிற்கின்றான் என்பதை இது கூறுகின்றது. மேலைப்பாட்டில் கூறிய பொருளை வலியுறுத்துகின்றது இப்பாட்டு.

58. ஓராதே ஒன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்.

ஓராதே — (இவ்வதிகாரத்தில் ஐந்தாம் செய்யுளில் கூறியபடி தன்னியல்பை உணரும் நெறியில் பாசங்களாகிய தத்துவங்களினின்றும் நீங்கித் தன்னியல்பை உணரப் புகுமிடத்து) மேலும் ஆராயாமல், ஒன்றையும் உற்று உன்னாது — ஒரு பொருளையுங் கற்பனை செய்து முன்னிலைப்படுத்தி உணராது, நீ முந்திப் பாராது — தன் முனைப்புத் தோன்ற நில்லாது, பார்த்ததனைப் பார் — இதுவரை உன் அறிவில் நிலைபெற்று நின்று நீ செய்த செயல்களைக் கண்டு வந்த சாட்சியாகிய திருவருளைக் காணுது காண்பாயாக.

இவ்வாறு உரையும் உணர்வும் கடந்து அசைவற்று நிற்பின் அருளொளியாகிய சிவஞானம் பூவின்கண்ணுள்ள மணம் வெளிப் படுதல்போலத் தானே வெளிப்பட்டு உன்னை அடக்கிக் கொள்ளும் என்பது கருத்து.

59. களியே மிகுபுல ணுக்கருதி ஞான
ஒளியே ஒளியாய் ஒளி.

களியே — மேற்கூறியபடி நிற்கும்போது வெளிப்படும் மகிழ்ச்சி யினையே, மிகுபுலனுக்கருதி — மேம்பட்ட விடயமாக உணர்ந்து, ஞான ஒளியே ஒளியாய் — அங்கு உள்ளதாகிய திருவருள் ஒளியினையே ஒளியாகக் கொண்டு, ஒளி — அதனோடு ஒற்றுமைப்பட்டுக் கரந்து நிற்பாயாக.

கரந்து நிற்றலாவது யான் எனது என்னும் செருக்கு இன்றி நிற்றல்.

60. கண்டபடி யேகண்டு காணுமை காணுமை
கொண்டபடி யேகொண் டிரு.

கண்டபடியே கண்டு — திருவருளாகிய ஞானம் விளக்கியதனையே நீ கண்டு, காணுமை காணுமை — ஒன்றையும் அறியாமையாகிய கேவலநிலை தோன்றுதபடி, கொண்டபடியே கொண்டு — திருவருள் உன்னை அடங்கக் கொண்டபடியே அதன்கண் அடங்கி, இரு — நிற்க.

இறுதியில் உள்ள ஐந்து பாட்டுக்களாலும் ஞானத்தைக் காணும் முறையும் அது வெளிப்பட்டு நிற்குமாறும் வெளிப்பட்டபின் அத னுட் கலந்து யான் எனதென்னும் செருக்கற்று அடங்கி நிற்குமா றுங் கூறப்பட்டன.

---

## ஏ. உயிர் விளக்கம்

(உயிர் பாசத்தோடு கூடிவந்ததனுல் உண்டாகும் வாதனையா கிய அசுத்தத்தை நீக்கிக் கொண்டு தெளிவு பெறுதல்.)

61. தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோல்
தான்அதுவாய் நிற்குந் தரம்.

தூநிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார் — வெயிலின் கடுமையால் துயரமுற்றேனுக்குத் தூய குளிர்ந்த நிழல் எதிர்ப்பட்டால் அதன் கண் பொருந்தி இன்புறுக எனப் பிறர் யாரும் சொல்ல வேண்டுவ தில்லை; தானே நிழலின்கண் செல்வன். தான் அதுவாய் நிற்குந் தரம் — ஆன்மாவின்கண் திருவருள் வெளிப்பட்டபின் உலகை நோக் காது அத்திருவளில் அடங்கி அதுவேயாக ஒற்றுமைப்பட்டு நிற்கும் முறைமை, இதுபோல் தொகும் — உவமையில் காட்டியது போலத் தானே நிகழும்.

62 தித்திக்கும் பால்தானும் கைக்கும் திருந்திடும்நாப்
பித்தத்தின் தான்தவிர்ந்த பின்.

தித்திக்கும் பால்தானும் கைக்கும் — (பித்தமாகிய நோயுள்ள நாவிற்கு) இனிய சுவையுள்ள பாலும் கசப்பாகத் தோன்றும், நா பித்தத்தில் தவிர்ந்தபின் — அதே நாவானது பித்த நோயினின் றும் நீங்கிய பின், திருந்திடும் — உள்ள சுவையை உள்ளவாறு அறி யும் தன்மையைப் பெற்று பாலின் இனிய சுவையை அறியும்.

இது ஒட்டு என்னும் அணி. ஆன்மா மலத்தினின்றும் தீராத பெத்தநிலையில் தனக்குச் சார்பாயுள்ள பேரின்பச் சிவத்தை அறி யாது. ஆனல் மலநோய் தீர்ந்த முத்திநிலையில் அவ்வின்பத்தை அறிந்து நுகரும் என்பது கருத்து.

நமக்கு எஞ்ஞான்றும் பேரின்பச் சிவமே சார்பாக நிற்பினும் ஏன் அச்சிவத்தை அறிவதில்லை என்னும் வினவிற்கு உவமை காட்டி விடை கூறுகின்றது இப்பாட்டு.

63. காண்பான் ஒளிஇருளிற் காட்டிடவும் தான்கண்ட
வீண்பாவம் என்னுய் விடும்.

காண்பான் — உயிர் காணும்படி, இருளில் — மலத்தோடு கூடியிருந்த காலத்தில், ஒளி காட்டிடவும் — திருவருள் ஒளி உடனாய் நின்று காட்டி வைத்தும், தான் கண்ட வீண்பாவம் — அவ்வுதவியைக் கருதாது எல்லாம் தானே அறிந்ததாகக் கொள்வதனால் வரும் பாவம், என்னாய் விடும் — என்ன பயனைச் செய்துவிடுமோ?

வீண் பாவம் — காரணமின்றி வரும் பொல்லாங்கு. பாசத்தினீங்கிய உயிர் திருவருள் விளக்குதலால் தனது வியாபக இயல்பை உணரும். இவ்வனுபவநிலையைப் பெற்ற சிலர் திருவருளின் உண்மையை நோக்காது 'நான் பிரமம்' என்று உணர்வர். அவ்வுணர்வு பசுத்துவ வாதனை பற்றி யான் என்னும் செருக்காய் நிகழ்ந்தது. திருவருளைப் பெற்றும் இப்பேதைமை உணர்வை ஒருவன் மேற்கொள்வது அவன் பின்னரும் பிறவிக் குழியில் விழுவதற்கு ஏதுவாகும்.

64. ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

பன்மை — பலவாகத் தோன்றும் உலகம், ஒளியும் இருளும் ஒருமைத்து — திருவருளின்கண்ணும் மூலமலத்தின் கண்ணும் புலப்படாது நிற்றலாகிய ஒரே தன்மையை உடையது, (ஈரிடத்தும் வேற்றுமையாவது.) தெளிவு தெளியார் செயல் — தெளிந்து நிற்றலும் அறியாதிருத்தலுமே ஆம்.

ஆன்மா திருவருளைச் சார்ந்து தெளிந்து நிற்கும் சுத்த நிலையில் பலவகைப்படும் உலகம் தோன்றாது. அது எதனோடு ஒக்கும் என்றால் ஆன்மா இருள் மலத்தில் தோய்ந்து ஒன்றையும் அறியாது நிற்கும் கேவலநிலையில் உலகமாகிய பன்மை தோன்றாதிருத்தல் போலும்.

65. கிடைக்கத் தகுமேநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று.

நற்கேண்மையார்க்கு அல்லால் — நல்ல கேண்மையை உடையார்க்கு அல்லாமல், இன்று — இப் பெத்தகாலத்து, எடுத்துச் சுமப்பானை கிடைக்கத்தகுமே — தாழ்ந்த நிலையினின்றும் எடுத்துக் காப்பாற்றக்கூடிய உறுதியுடையான் ஒருவனைக் கிட்டுதல் கூடுமோ? கூடாது.



பெருஞ் செல்வர்கள் தமது கேளிரையே இவ்வுலகில் வறுமையினின்றும் நீக்கித் துன்பங் களைந்து பாதுகாப்பர். அதுபோல முதல்வனும் தன்பால் மெய்யன்புடையராய்த் தன் அடித்தொழில் செய்வாரையே அவர்தம் வினைகளைத் தானே ஏன்றுகொண்டு காப்பாற்றுவன் என்பது கருத்து. கேண்மையார் — சுற்றத்தார். இது ஒட்டு என்னும் அணி. பின்வருவதும் அது.

66. வஞ்ச முடன்ஒருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்.

ஒருவன் வைத்த நிதி — ஒருவன் சேமித்து வைத்த பொருளை, வஞ்சமுடன் கவர — கரவினால் கவர்ந்து கொள்ளுதற்கு, துஞ்சினனோ போயினனோ சொல் — பொருளை வைத்தவன் உறங்கினனோ? அல்லது வேறிடம் சென்றனனோ? சொல்வாயாக.

சொல் — இவ் வினாவிற்கு விடையைச் சொல்லுக.

உறங்காதும் பொருளை வைத்து வேறிடம் செல்லாதும் உள்ள ஒருவனது நிதியை வஞ்சித்துக் கொள்ளுதல் இயலாது. அதன் விருப்பத்தைப் பெற்றே கொள்ளுதல் வேண்டும். அதுபோல முதல்வனது திருவடி இன்பத்தையும் சாதகன் இறைவனது திருவருளாலேதான் பெறுதல் கூடும். அத்திருவருளைப் பெறுதற்கு அம்முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு அடங்கி நின்று அன்பு செய்தல் வேண்டும் என்பது கருத்து.

சிவசமவாதிகளும் அவிகாரவாதிகளும் உயிரினது முயற்சியினால் முதல்வனது பேரின்பத்தை எய்தக்கூடும் என்பர். அவர் கொள்கையை இப்பாட்டு மறுக்கின்றது.

67. தனக்கு நிழல்இன்றா ஒளிகவரும் தம்ப
மெனக்கவர நில்லா திருள்.

தனக்கு நிழல் இன்றா(க) — தன்னைத் தோற்றுவித்தற்கு ஒளி இல்லையாம்படி, ஒளி கவரும் தம்பமென — ஞாயிற்றின் ஒளியினால் முற்றிலும் கவரப்படும் படிகத் தூணைப் போல, கவர — ஆன்மபோதம் நிகழாதபடி அதனை முதல்வன் திருவருள் தன்னுட் கரந்து கொள்ளுதலினால், இருள் நில்லாது — ஆன்மாவிற்கு யான் எனது என்னும் செருக்கை விளைத்து நிற்கும் மூலமலம் தன்வலி முற்றிலும் கெட்டு நிற்கும்.

நிட்டை நிலையில் ஆன்மாவை முதல்வன் முற்றிலும் தன் அருளில் அடங்கி நிற்கச் செய்வன். அங்ஙனம் செய்தலினால் ஆன்மாவைப் பற்றி நின்ற மலம் முற்றிலும் நீங்கும் என்பது கருத்து.

68. உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்கை அருளார் நிலை.

*அருள் ஆர் நிலை* — திருவருள் ஒளியில் பொருந்தி அடங்கி நிற்கும் நிலையாவது, *உற்கை தரும் பொற்கை உடையவர் போல்* — தழற் கொள்ளியைப் பிடித்துள்ள அழகிய கையை உடையவர் ஒரு பொருளைக் காணப்புகும்போது கொள்ளியை முன்னிட்டுத் தாம் பின்னே நிற்றல் போல, *உண்மைப்பின் நிற்கை* — சிவமாகிய ஞேயம் வெளிப்பட்டுத் தோன்றுதற் பொருட்டு அதன் திருவருளாகிய மெய்யின் பின் நிற்றலே ஆகும்.

69. ஐம்புலனால் தாம்கண்ட தன்றால் அதுவொழிய
ஐம்புலன்ஆர் தாம்ஆர் அதற்கு.

*ஐம்புலனால் தாம் கண்டது* — சிவமாகிய ஞேயம் ஐம்பொறிகளால் தாம் கண்டதாகிய ஒரு பொருள், *அன்றால்* — அன்றாயின், *அதற்கு* — அப்பொருளை அறிதற்கு, *அதுவொழிய* — அப்பொருளே காட்டாக நிற்பதன்றி, *ஐம்புலன் ஆர்? தாம் ஆர்?* — ஐம்பொறிகள் எத்தகுதி உடையவை? தாமும் எத்தகுதி உடையவர்?

*புலன்* — ஆகுபெயர்.

முதற்பொருள் ஐம்பொறி முதலிய தத்துவங்களுக்கு அப்பாற்பட்டது. ஆதலால் அதனைத் திருவருளைக் கண்ணாகக் கொண்டு அத்திருவருள் காட்டக் காணுதல் வேண்டும் என்பது கருத்து.

70. தாமே தருமவரைத் தம்வலியி னாற்கருத
லாமே இவன்ஆர் அதற்கு.

*தாமே தரும் அவரை* — ஒரு பொருளைத் தம்விருப்பத்தினால் கொடுக்கும் ஒருவரை, *தம்வலியினாற் கருதல்* — தமது கட்டாயத்தினால் தருபவராக நினைத்தல், *ஆமே* — பொருந்துமா? *இவன் ஆர் அதற்கு* — பேரின்பத்தைப் பெறுதற்கு இவ்வுயிர்க்கு என்ன வலி உள்ளது?



இப்பாட்டின் கருத்து இறைவன் மேற்கொண்ட உலக சிருட்டியின் நோக்கமே உயிர்களை அறியாமையின் நீக்கிப் பேரின்பப் பொருளாகிய தன்னை அவை பெறும்படி செய்வதே. அதற்குச் செய்யத்தகுவது முதல்வன் அருள்வழி நிற்பதன்றிப் பிறபொருள்களைத் தன்கண் வருவித்தற்குச் செய்யும் முயற்சிகள் போன்ற செயல்கள் அல்ல. முயற்சியின்றி இறைவன் எய்தப்படுபவன் என்பது கருத்தன்று; அம்முயற்சி இறைவன் ஆணைவழிப் பட்டதாய் இருத்தல் வேண்டும் என்பதே கருத்து. இறைவன் சுதந்திரம் உடையவன், உயிர்கள் அவன் அருள்வழி நிற்றற்கு உரிய அடிமைகள் என்னும் கருத்தின்றித் தனக்கே சுதந்திரம் உண்டு எனக் கொண்டு முயலும் முயற்சியே இங்கு விலக்கப்படுவது.

" தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மால் அயனும்
இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார் "

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுளாற் பெறப்படும் கருத்தும் இதுவே.

---

## அ. இன்புறு நிலை

*[ஆன்மலாபம் எனப்படும் சிவ போகத்தைப் பெறும் இயல்பு]*

71. இன்புறுவார் துன்பார் இருளின் எழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

*இருளின் எழுஞ்சுடரின் பின்புகுவார்* — மல இருளினின்றும் அதனைக் கிழித்து மேல் எழுகின்ற ஞானமாகிய விளக்கை முன்னிட்டு அதன் பின் நிற்பவர், *இன்புறுவார்* — பேரின்பத்தை அடைவர், *முன்புகுவார்* — அங்ஙனமன்றி அதனைப் பின்னிட்டுத் தாம் முன் செல்வோர், *பின் துன்பார்* — பின்னர் துன்பம் அடைபவரே ஆவர்.

சிவஞானம் விளங்கப்பெற்ற பின் அதனைக் கண்ணாகக் கொண்டு சிவத்தை உணர்ந்து நிற்றல் வேண்டும். அவ்வாறன்றி அச் சிவ ஞானத்தைச் சோர்வுபற்றி இழந்து ஆன்மபோதம் முனைந்து நிற்பாரே ஆயின், அவர் பின்னர் பிறவித் துன்பத்துட்படுவர் என்பது கருத்து.

72. இருவர் மடந்தையருக் கென்பயன் இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி யுறின்.

*இருவர் மடந்தையருக்கு* — (தம்முள் கூடிநிற்கும்) இரண்டு மகளிர்க்கு, *என்பயன்* — (அக்கூட்டத்தால்) என்ன பயன் உண்டாகும்? (தக்கபயன் உண்டாகாது); *ஒருவன் ஒருத்தி உறின்* — ஒப்பற்ற ஆண்மகனை ஒப்பற்றமகள் தனக்குக் கணவனாகப் பொருந்தின், *இன்பு உண்டாம்* — தான் பெறுதற்கு உரிய இன்பம் உண்டாகும்.

இது பிறிது மொழிதல் என்னும் அணி. **இருவர் மடந்தையர்** என்றது திருவருளையும் ஆன்மாவையும் குறிக்கும்; **ஒருவன்** என்றது திருவருளுக்கு முதலாகிய சிவத்தைக் குறிக்கும். சிவஞானத்தினது பயன் பாசநீக்கம் சிவப்பேறு என இரண்டு. ஆன்மா முதற்கண் திருவருளைத் தலைப்பட்டு உணர்ந்து அதனோடு ஒற்றுமைப்பட்டு நிற்கும். இதனையே இப்பாட்டு இருவர் மடந்தையர் கூட்டத்திற்கு ஒப்பிட்டது. இது துரிய அருணிலை எனப்படும்; இதன்கண் நிகழ்வது பாசநீக்கம், இங்குப் பேரின்ப அனுபவம் விளைவதில்லை. இஃது இருளை நீக்கும் அருணோதயம் போன்றது. இதன்பின், அத்திருவருள் ஆன்மாவைச் சிவத்தோடு ஒன்றுவிக்கும். அருணோதயத்தின் பின் உண்டாகும் சூரியோதயத்தில் நம்கண் ஒளியைத் துணையாகக் கொண்டு அதன் முதலாக உள்ள சூரியனைக் காணுதல் போல, ஆன்மா திருவருளைக் கண்ணாகப் பெற்று அதன் முதலாகிய சிவத்தைக் கண்டு ஒற்றுமைப்பட்டு நிற்கும். இந்நிலையில் விளைவதே பேரின்ப நுகர்ச்சியாகிய சிவப்பேறு. இது துரியாதீத ஆனந்த நிலை எனப் பேசப்படும். இந்நிலையினையே இப்பாட்டு **ஒருவன் ஒருத்தி உறின்** என்ற தொடரால் குறிக்கின்றது. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை எனப்படும் ஞானநிலைகள் நான்கனுள் தெளிதலின் பயன் அருளைத் தலைப்பட்டு ஒன்றிநின்று எய்தும் பாசநீக்கம் அல்லது ஆன்ம சுத்தி; நிட்டையின் பயன் ஞேயம் எனப்படும் சிவத்தை வெளிப்படக் கண்டு ஒற்றித்து நின்று இன்புறும் சிவப்பேறு.

சிவத்தால் ஆளப்பட்டு அடங்கிநிற்கும் இயல்புடைமையின் ஆன்மா பெண் எனப்பட்டது; திருவருள் முதல்வனது சத்தியாய் அவன்வழி நின்று தொழிற்படுதல் பற்றி அதுவும் பெண் எனப்பட்டது.

73. இன்பதனை எய்துவார்க் கீயும் அவர்க்குருவம்
இன்பகனம் ஆதலினால் இல்.

*எய்துவார்க்கு* — தன்னை வந்து அணையும் உயிர்க்கு, *இன்பதனை ஈயும் அவர்க்கு* — பேரின்பத்தைக் கொடுத்தருளும் முதல்வனுக்கு, *உருவம் இன்பகனம்* — சொரூபம் இன்பமயமே ஆகும், *ஆதலினால் இல்* — இக்காரணத்தால் முதல்வனுக்கு அவ்வணைவினால் புதியதொரு இன்பம் இல்லை.

"அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்; யாது நீ பெற்றதொன்று என்பால்" என்னும் திருவாசகம் சிந்தித்தற்குரியது.

74. தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகமெனக் கொள்.

*தாடலை போல்* — தாள் தலை என்னும் இரண்டு சொற்கள் புணர்நிலைக்கண் அவ்வாறு இரண்டாய்ப் பிரிந்து ஒலிக்காமல் தாடலை என ஒரு சொற்றன்மைப்பட்டு நின்றாற்போல, *அவை கூடி* — ஆன்மாவும் சிவமும் கூடுதலால், *தான் நிகழா(த)* — ஆன்மபோதம் நிகழாது சிவம் ஒன்றே விளங்கப் பெறுகின்ற, *வேறு இன்பக் கூடலை* — உலக இன்பத்திற்கு வேறாகிய பேரின்ப நுகர்ச்சி நிகழும் கலப்பு

நிலையை, நீ ஏகம் எனக்கொள் — நன் மாணுக்கனுகிய நீ பரமுத்தி நிலை ஆகிய ஒன்ருதல் எனக் கொள்க.

"பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமே ஆகின்ருன்; முத்திநிலையில் பல என்பதில்லை; அது நீ" என்ருற் போல உபநிடதங்களில் அறிவுரைகள் உள்ளன. அன்றியும், முத்தி நிலையை ஏகம் (ஒன்று) என்னும் சொல்லால் குறிக்கும் மரபும் உள்ளது. இவற்றைக் கொண்டு, "பரம்பொருளுக்கு வேருக ஆன்மா என ஒன்றில்லை; தன்னைப் பரம்பொருளுக்கு வேருக எண்ணும் எண்ணமே பிறப்பிற்குக் காரணமாக உள்ள மயக்க உணர்வு; யான் பரம்பொருள் எனத் துணிந்து அறிவு மாத்திரமாய் நிற்பதே மெய்யுணர்வு நிலை" எனக் கூறுவோர் உள்ர்.

இப்பாட்டும் அடுத்தபாட்டும் அங்ஙனம் கூறுவோர் கொள்கையை மறுகின்றன.

உலக இன்பம் நுகரும்போதும் ஒருவன் இன்புருவப் பொருளையறிந்து அதனேடு தோய்ந்து தன்னை மறக்கும் நிலையில்தான் இன்ப நுகர்ச்சி உண்டாகும்; தானும் தன் அறிவும் அறியப்படும் பொருளும் என மூன்று பொருள்கள் இருப்பினும், இன்பம் நுகரும் நிலையில் யான் என்னும் உணர்வும், அறிகின்றேன் என்னும் அறிவு நிகழ்ச்சியைப் பற்றிய மறித்துணர்வும் நிகழ்வதில்லை. இன்பம் ஒன்றே அவன் அறிவால் பற்றப்படும். இது போன்றதே சிவ அனுபவமும். உலக இன்ப நுகர்ச்சியில் கருவிகளோடு கூடி அழுந்தி அறிகின்ருேம்; சிவாநந்த நுகர்ச்சியில் ஆன்ம உணர்வு தத்துவங்களினீங்கி வியாபகமாக நின்று சிவத்தை உணர்ந்து அதில் அழுந்துகிறது. அறிபவன், அறிவு, அறியப்படுபொருள் (ஞாதா, ஞானம், ஞேயம்) என்னும் மூன்றும் இருப்பினும் அறியப்படுபொருளாகிய சிவம் ஏனையவற்றைத் தன்கண் அடங்கக்கொண்டு தானே ஆகி நிற்கும் இயல்பினையே உபநிடதங்களும் பிறவும் மேலே காட்டிய உரைகளால் குறிக்கின்றன என்பது கருத்து.

இக்கருத்து "அத்வைதம்", "அத்விதீயம்" என்னும் சொற்களாலும் குறிக்கப்படுகின்றது. அவற்றின் பொருள் "இருதிறன் இன்மை", "இரண்டாவதின்மை" என்பன. அவற்றின் கருத்து அந்நியம் இன்மை, பிரிப்பின்மை என்பதே ஆகும். இங்கு வரும் ஏகம் என்னும் சொல்லை "அத்வைதம்" எனக் கொள்ள வேண்டுவதின்று. இங்கு ஏகம் என்னும் சொற்குப் பொருள் ஒன்ருதல் அல்லது முத்திநிலை எனக் கொள்வதே பொருத்தம்.

ஏகமாய் நிற்றலும், அத்துவிதமாதலும் பிறப்பு நிலையிலும் வீட்டு நிலையிலும் ஒப்ப இருப்பினும், பிறப்பு நிலையில் ஆன்மா மலங்



காரணமாகச் சிவத்தை உணராது தானே இருப்பதாக உணர்ந்து வினைகளைச் செய்தலின், இறைவன் அதற்கு அவ்வினைக்குத்தக்க பயனுகிய உலக இன்பத் துன்பங்களை நுகரச் செய்கின்ருன்; முத்தி நிலையில் மலத்தின் நீங்கிச் சிவத்தை உணர்ந்து தன்னை இழந்து நிற்றலின், அந்நிட்டைக்குச் சிவம் தன்னையே பயனுகத் தருகின்றது.

"நம்செய லற்றிந்த நாம்அற்ற பின்நாதன்
தன் செயல் தானேஎன் றுந்தீபற;
தன்னையே தந்தான்என் றுந்தீபற."

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா" என்ருற் போலவரும் அருளுரைகளை எண்ணுக.

75. ஒன்ருலும் ஒன்ருது இரண்டாலும் ஓசையெழாது
என்ருலொன் றன்றிரண்டும் இல்.

ஒன்ருலும் ஒன்ருது — (உள்பொருள்களை நிச்சயிக்கும்போது) பொருள் ஒன்ருயினும் ஒன்றுபடுதல் இல்லையாம் (அஃதாவது ஒரு பொருட்குப் பிறிதொரு பொருள் இருந்தாலன்றி ஒன்றுதல் என்னும் வழக்கு நிகழாது என்றபடி); இரண்டாலும் ஓசை எழாது — பொருள் இரண்டாய்ப் பிரிந்து நிற்பன எனினும் ஒன்ருதல் என்னும் பேச்சு எழாது. என்ருல் — இங்ஙனமாயின், ஒன்று அன்று இரண்டும் இல் — பொருள் ஒன்றன்று, இரண்டே; ஆயினும் இரண்டாய்ப் பிரிந்து நிற்றல் இல்லை என்பதே துணிபாம்.

மேலைப் பாட்டில் "தான் நிகழாக் கூடலை ஏகம் எனக் கொள்" என மாணுக்கனை உடன்படவைத்தபோது ஆசிரியர், ஆன்மாவையும் பரமான்மாவையும் ஒன்றென்ருே இரண்டென்ருே கூருமல் புணர்நிலையில் ஒன்றுபட்டு உள்ளது எனப் பொதுமைப்படக் கூறினுர். அங்ஙனம் ஏன் கொள்ளவேண்டும்? ஒன்றென்ருே இரண்டென்ருே அறுதியிட்டுக் கூறின் வரும் குற்றம் யாது? என்று வினவும் மாணுக்கனுக்குக் காரணங்காட்டி மேற்கூறிய சித்தாந்தத்தை இதனுல் வலியுறுத்துகின்ருர் ஆசிரியர்.

"காண்போன் பொன்வண்ணனும் முதல்வனும் ஆள்பவனும் வேதமூலமும் ஆகிய புருடனை எப்பொழுது காண்கின்ருனே அப்பொழுது அவன் மெய்யுணர்ந்தோனுய்ப் புண்ணிய பாவங்களை உதறிவிட்டு மாசற்றவனுய்ப் பரமபுருடனுடன் சமநிலையை (காமியம்) அடைகின்ருன்" என்பது முண்டக உபநிடதத்தில் 3 ஆம் முண்டகத்தில் முதற் கண்டத்தில் உள்ள மூன்ரும் வாக்கியம். இதிலும், இது

போன்ற பிறவற்றிலும் சமமாதல் ஒன்றுதல் இரண்டறுதல் முதலிய சொற்கள் வருதலின், அச்சொற்கள் நித்தியப் பொருள்கள் இரண்டு ஆதலையும், அவை பிரிப்பின்றி நிற்றலையும் உள்ளீடாகக் கொண்டுள்ளன என்பது பாட்டின் கருத்து. இப்பாட்டால் சாதிக்கப்படும் பொருளே அத்வைதம் என்பதன் பொருள் ஆகும். த்வைதம் — இருதிறனுதல் ; அ — அல்லது, பிறிது. அத்வைதம் — இருதிறனல்லது, இரண்டாய்நிற்பதல்லது.

76. உற்றுரும் பெற்றுரும் ஓவார் உரையொழியப்
பற்றுரும் அற்றுர் பவம்.

உற்றுரும் — சிவப்பேற்றினைப் பெறுதற்கு ஏதுவாகத் தெளிவுணர்வை உற்றவரும், பெற்றுரும் — சிவப்பேற்றினை எய்தி நிட்டையில் நின்றேரும், ஓவார் — மெய்ப்பொருளைப் பிரிந்து ஒருகாலும் நீங்கமாட்டார், பற்றுரும் — கேட்டல் சிந்தித்தல்களைப் பொருந்தியும் அவற்றின் மேற்படியாகிய தெளிதல் நிட்டை என்பவற்றில் வாராமை காரணமாக முதற் பொருளைப் பற்றிநில்லாதாரும், பவம் அற்றுர் — பிறப்பற்றவரே ஆவர்.

ஞானச் செய்திகள் நான்கனுள் தெளிதலுக்கும் நிட்டைக்கும் இடையீடு இல்லை. தெளிதல் இடையீடின்றி நிட்டையிற் செலுத்திவிடும். நிட்டை எய்தினேர் இருவகைப்படுவர். ஒருகால் நிட்டை எய்தி உலக முகப்படாமல் அதிலேயே நின்றுவிடுதல். இம் முத்தி சத்திய முத்தி எனப்படும் சத்யம் — விரைவில் வருவது. மற்றெரு வகையினர் நிட்டை கூடிச் சிவத்தை உற்று, மீள உலக முகப்பட்டு இங்குமங்குமாக நிற்பர். அவர் உற்றுர் எனப்பட்டார். அவரும் இங்குக் கூறிய சாதனைகளில் நின்று சிவத்தைக் கூடிப் பின் பிரியாது நிற்போரே ஆவர். இவர் போலன்றிக் கேட்டல் சிந்தித்தல்களை மட்டும் பொருந்தினேர் பின்னர் அருள்நிலையைத் தலைப்பட்டுச் சிவப்பேற்றை எய்தின் பரமுத்தி பெறுவர். பெருவிடில் பதமுத்தி பெற்றுப் பின் பரமுத்தியை எய்துவர். அவரையே ''பற்றுரும் அற்றுர் பவம்'' என ஆசிரியர் கூறியுள்ளார்.

77. பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீஒன்றுஞ் செய்யாது நில்.

பேய் ஒன்றுந் தன்மை — பேய் பிடித்தாரது தன்மையோடு ஒத்த தன்மை, பிறக்குமளவுமே — உனக்கு உண்டாகும் வரையும், நீ ஒன்றும் செய்யாது நில் — நீ அருள்வயப்பட்டு அருளாலல்லது ஒன்றும் செய்யாமல் அதனேடு ஒற்றுமைப்பட்டு நிற்க.



அங்ஙனம் நிற்பார்க்கு மும்மலவாதனை வந்து பொருந்தாது; பின் நிட்டையும் வந்து கூடும்.

78. ஒண்பொருட்கண் உற்றுர்க் குறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்.

ஒண் பொருட்கண் உற்றுர்க்கு — ஞானத்தைத் தலைப்பட்ட சீவன் முத்தர்களுக்கு, உறு பயனே — வரும் பயன் மேலாகிய பேரின்பமே, அல்லாது — அல்லாமலும், கண்படுப்போர் கைப்பொருள் போற் காண் — ஞானத்தை அடைதற்குச் சாதனமாய் நின்ற சரியை கிரியா யோகங்களும் துயில் கொள்வோரது கைப்பொருள் தானே நழுவுவதுபோல அம்முத்தர்களினின்றும் தாமே நழுவும் என அறிக.

உறங்குபவனது கைப்பொருள் தானே நழுவுவது போல ஞானிகளும் தாம் முன்னே கைக்கொண்டு வந்த சமயாசாரங்களை இனி அநுட்டிக்க வேண்டியதில்லை என்று எண்ணி விலக்கார்; அவர்களின் முனைப்பின்றித் தாமே அவை நீங்கும் என்றபடி.

79. மூன்றுய தன்மைஅவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றுத இன்பமதென் சொல்.

அவர் — சீவனும் சிவனுமாகிய இருவர், மிகமுயங்கி — தம்முள் மிகவும் கூடிய கலப்பினுல், மூன்றுய தன்மை தோன்றுத இன்பம் — காண்பான், காட்சி, காணப்படுபொருள் என்னும் முத்திறம் விளங்காத இன்ப அனுபவம், அது — அம்முத்தி இன்பம், சொல் என் — இதனை விவரிக்கும் சொல் யாதுளது ?

இதனுல் அவ்வானந்த மிகுதியின் அதிசயங் கூறப்பட்டது.

சீவன் முத்தனுக்கு எல்லாம் சிவமாய்த் தோன்றும் என்றபடி. ''இன்றெனக் கருளி'' என்ற திருவாசகப் பாடல் இங்கு நினைவு கூரற்பாலது.

80. இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம்
அன்பு நிலையே அது.

இன்பில் இனிது — இன்பங்களுள் தலையாய இன்பம் எனப்படும் பேரின்பம், என்றல் இன்றுண்டேல் — அதனை ஏற்றுக் கொள்ளுதலாகிய உணர்வு நிலை இப்பிறப்பில் ஒருவனுக்கு உளதாயின், இன்று உண்டாம் — இப்பிறப்பிலேயே அவ்வின்ப விளைவும் உண்டாகும், அன்பு நிலையே அது — முதற் பொருளின் பொருளை உணர்ந்து இடையறு அன்பு செய்து நிற்கும் நிலைக்கண்ணதே அப்பேரின்ப நிலை.

பாசத்தினீங்கிய ஆன்மா முதல்வனிடத்து மெய்யன்பு செய்து நிற்பின் அவ்வன்பே இன்பாய்ச் சிவமெனப்படும், அவ்வெளிப் பாட்டை அழுந்தி அறிந்து நிற்றலே பரமுத்தி நிலையாகிய இன்புறு நிலை என்பதும், அது இம்மையிலேயே ஒருவன் எய்துதற்கு உரியது என்பதும் கூறப்பட்டன.

## ௯. ஐந்தெழுத்தருள்நிலை

[திருவைந்தெழுத்தால் குறிக்கப்படும் திருவருள் நிலை சிவத்தைச் சிவஞானத்தாற் தலைப்பட்டார் அந்நிலையில் சலியாதிருத்தற்குத் திருவைந்தெழுத்து எண்ணப்படும்.]

81 அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின்.

தெரியப்புகின் — ஆராயப் புகுந்தால், அருள்நூலும் — சிவாகமங்களும், ஆரணமும் — வேதமும், அல்லாதும் — இவையல்லாத பிற நூல் தொகுதியும், ஐந்தின் பொருள்நூல் — திருவைந்தெழுத்தால் குறிக்கப்படும் பொருளை விவரிக்கும் நூல்களேயாம்.

திருவைந்தெழுத்து எல்லா நூற்பொருளும் தன்பொருளேயாகத் திரண்டு கூடிய மகா வாக்கியம் என்பது கருத்து.

82. இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள்.

ஓங்காரத்துள் — ஓங்காரத்தின் பரிணாமமாகிய சிவாயநம என்னும் ஐந்தெழுத்துக்களில், இறை — முதற் பொருளும், சத்தி — அதன் குணமும் உருவமும் ஆகிய திருவருளும், பாசம் — ஆணவ மலமும், எழில் மாயை — எழுச்சியை உடைய மாயையைச் செலுத்தும் திரோதானமும், ஆவி — ஆன்மாவும், உறநிற்கும் — பொருளாகப் பொருந்தி நிற்கும்.

சி — இறை, வா — சத்தி, ய — ஆன்மா, ந — மாயை, கன்மம், திரோதாயி, ம — ஆணவமலம்.

பிரணவ கலைகளிலிருந்து திருவைந்தெழுத்துத் தோன்றும் என்பதைப் பின்வரும் சிவஞானதீபச் செய்யுளால் அறிந்து கொள்க.

"நாதத்தில் சிகாரவெழுத் திசைந்து தோன்றும்
நண்ணரிய விந்துவினில் வகாரந்தோன்றும்
தீதற்ற யகாரம்ம காரத்திற் றோன்றும்
திகழுமுகாரத்தினிய நகாரந் தோன்றும்
போதுற்ற மகாரம்அகா ரத்தின் பாலாம்"

இங்ஙனமன்றி நாதம்விந்து அகர, உகர, மகரங்களில் இருந்து முறையே சி, வா, ய, ந, ம என்னும் ஐந்தெழுத்தும் தோன்றும் எனக் கூறுவாரும் உளர்.

83. ஊன நடன மொருபா லொருபாலா
ஞானநடந் தானடுவே நாடு.

ஒருபால் ஊன நடனம் — (சிவாய நம என்னும் திருவைந்தெழுத்தில்) ஒரு பக்கத்தில் **நம** வால் குறிக்கப்படும் ஊன நடனமும், ஒரு பால் ஞான நடம் — மற்றொரு பக்கத்தில் **சிவ** வால் குறிக்கப்படும் ஞான நடமும், ஆ(க) — நிகழா நிற்ப, தான் — **ய** வால் குறிக்கப்படும் ஆன்மா, நடுவே — நடுவில் உள்ளதாக, நாடு — ஆராய்ந்து நிற்பாயாக.

ம என்பது மலத்தால் நிகழும் அறியாமையாகிய கேவல நிலையைக் குறிக்கும். இந்நிலை நமக்கு மறப்பும் உறக்கமுமாக நிகழ்ந்து வரும். ந என்பது முதல்வனது திருவருள் மாயைகன்மங்களை உயிருக்கு அணைத்தலால் வரும் அறிவு விளங்கும் நிலையைக் குறிக்கும். இது சகலம் எனப்படும். மேலும் இது நமக்கு நினைப்பும் விழிப்புமாக நிகழ்ந்து வரும். உயிர் பிறப்பு நிலையில் சகல கேவலங்களாகிய நினைப்பும் மறப்பும் விழிப்பும் உறக்கமும் என்னும் நிலைகளை மாறி மாறி அடைந்து வரும். இவ்வாறு மாயை கன்மங்களில் அழுந்தியும் ஆணவத்தில் அழுந்தியும் வரும் நிலையைச் செய்வது இறைவனுடைய திரோதான சத்தி. இங்ஙனம் செய்யும் செயலை ஊன நடனம் என ஆசிரியர் குறிக்கின்றார். பிறப்பு நிலையிலுள்ள உயிர்களெல்லாம் முதல்வனுடைய ஊன நடனத்தில் பட்டுச் சுழல்வனவே ஆம். இங்கு உயிர் தன்னையும் உணராது முதல்வனையும் உணராது திருவருளையும் உணராது. ஞான குருவின் அருள் பெற்ற உயிர் தனக்கு நிகழும் சகல கேவலங்களையும் அவற்றிற்குக் காரணமாகிய மாயை கன்மங்களையும் ஆணவத்தினையும் சுட்டி அறிந்து அவற்றின் நீங்கித் தன்னை உணர்ந்து நிற்கும். பின்னர் தனக்கு ஆதாரமாக உள்ள திருவருளை உணரும். உணர்ந்து அத்திருவருளில் அடங்கி நிற்கும்போது பேரின்பம் வெளிப்பட அப்பேரின்பத்தில் அழுந்தி நிற்கும். சி என்பது பேரின்பத்தில் அழுந்தி நிற்கும் இன்புறு நிலையைக் குறிக்கும். வா என்பது பேரின்பம் தேன்றப்பெறாத நிலையில் அருளை உணர்ந்து அதில் அழுந்தி நிற்கும் அருள் நிலையைக் குறிக்கும். முத்தி நிலையில் உயிர் சிகரவகரங்களால் குறிக்கப்படும் இன்புறுநிலை, அருள்நிலை என்பவற்றில் மாறிமாறி நிற்கும். இவ்வாறு உயிரைச் சகல கேவலங்கள் நிகழாதபடி தன் அருளில் உய்த்து அருள்நிலை இன்புறுநிலை என்பவற்றில் நிலைபெறச் செய்யும் முதல்வனது செயல் ஞான நடம் எனப்படும். மேலே அறியுநெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை என்பவற்றில் கூறிய கருத்துக்கள் எல்லாவற்றையும் இவ்வாறு பிறப்பு நிலை, வீட்டுநிலை என்பவற்றில் நிகழும் ஊனநடம், ஞானநடம் எனப் பகுத்து நம, சிவா என்பவற்றில் வைத்து உணர்ந்து ஆன்மாவானது இவ்விரண்டு நிலைகளில் யாதேனும் ஒன்றின் நிற்பதாய் அவற்றிற்குக் காரணமாகிய மலமாயை கன்மங்களுக்கும் சிவன் அருள் என்பவற்றிற்கும் வேறாக நிலைத்துள்ள பொருள் என்பதைத் தெளிந்து பிறப்பு நிலையின் நீங்கி நிற்றல் வேண்டும் என்பதே சிவாயநம என எண்ணுதலாகும்.



84. விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரப் பெறும்.

நமேவி — திரோதான சத்தியின் தொழிற்பாட்டால் மாயை கன்மங்கள் பொருந்துதலால், மவிரிய — ஆணவமலம் காரியப்பட, யவ்வை மீளவிடா — இங்ஙனம் மலமாயை கன்மங்கள் ஆன்மாவை சகல கேவலங்களிலிருந்து மீளுதற்குத் தடையாய் நிற்கும். இது பிறப்பு நிலை எனப்பட்ட பெத்தநிலை. தம் பெரிய வினைதீர — ஆன்மாக்களுடைய மிகுந்த வினையும் வினைக்குப் பற்றுக் கோடாகிய மாயையும் அதற்குக் காரணமாகிய மூலமலமும் தீக்கையாலும் ஞானத்தாலும் தம்வலி கெடின், சி பெறும் — **சி** யால் குறிக்கப் பெறும் பேரின்ப நிலையைத் திருவருளால் ஆன்மா பெறும்.

85. மாலார் திரோத மலமுதலா மாறுமோ
மேலாசி மீளா விடின்.

மால் ஆர் திரோதம் — மயக்கம் பொருந்திய திரோதமாகிய **ந** கரமும், மலம் — மகரமும், முதலா — முற்பட்டு நிற்ப, சி மேலா — சிகாரமானது மேலாகும்படி, மீளாவிடின் — மீளுதல் இல்லை என்றால், மாறுமோ — பிறப்புநிலை நீங்குமோ? நீங்காது.

நகரம் முதலாக ஓதி அம்முறையில் நின்றால் பிறப்பு நீங்காது; சிகரம் முதலாக ஓதி அம்முறையில் நின்றால் பிறப்பு நீங்கும் என்பது கருத்து. இங்கு நிற்றல் என்பது தன் உணர்வில் சகல கேவலங்கள் நிகழாதபடி திருவருளை நோக்கி நிற்றல்.

86. ஆராதி யாதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

ஆர் ஆதி ஆதாரம் — எங்கும் நிறைந்த முதற்பொருள் உயிர்களுக்கு ஆதாரம் ஆகும், அது மீண்டு பாராது — அம்முதற் பொருளைச் சகல கேவலங்களில் நின்றும் திரும்பி நோக்காது, மேல் ஓதும் பற்று — மேலும் சகல கேவலங்களையே (ந, ம வையே) முற்படக் கொண்டு ஓதி நிற்க ஏதுவாகிய, பற்று — உலகப் பற்று, அ[illegible] — இரங்குதற்கு உரியது.

87. சிவமுதலே யாமாறு சேருமேல் தீரும்
பவம்இதுநீ ஓதும் படி.

சிவ முதல் ஆமாறு — சிவமும் அருளுமே முற்பட்டு நிற்கும்படி, சேருமேல் — ஆன்மா அறிந்து நிற்பின், தீரும் பவம் — பிறப்பு நீங்கும். இது நீ ஓதும்படி — இதுவே வீட்டை விரும்பும் நீ ஓதி நிற்கும் முறைமை.

88. வாசி அருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமாம் அங்கு.

வாசி அருளி — (சிவாய நம என ஓதி நின்றால்) திருவருள் பேரின்பச் சிவத்தைக் காட்டி, யவை — யகாரமாகிய உயிரை, வாழ்விக்கும் — பேரின்பத்தை எய்துவிக்கும், மற்று — இனி, அதுவே — அங்ஙனம் சிவத்தோடு ஒன்றி நிற்கும் ஆன்மாவே, அங்கு — அம்முத்தி நிலைக்கண், ஆசில் உருவமும் ஆம் — குற்றமற்ற திருமேனியும் ஆம்.

முத்தான்மாக்கள் சிவமேயாவர் என்பது கருத்து. "அதுவே ஆசில் உருவமும் ஆம் அங்கு" என்னும் தொடருக்கு அத்திருவருளே உயிருக்கு முத்திநிலைக்கண் குற்றமற்ற உடம்பாக நின்று பேரின்பத்தை நுகர்விக்கும் எனவும் உரைத்தல் பொருந்தும். உடம்பாவது இன்பத் துன்ப நுகர்ச்சிக்கு இடமானது என்பர் அளவை நூலோர்.

பிறப்பு நிலையில் இன்பத் துன்ப நுகர்ச்சிக்கு இடமாவது மாயா காரியமாகிய உடம்பு. முத்திநிலைக்கண் அது உடம்பாதல் கூடாமையால், அங்குப் பேரின்ப நுகர்ச்சிக்கு உடம்பு போல நின்று உபகரிப்பது முதல்வனது திருவருளே ஆம். இனி அவ்வருளே முதல்வனுக்குக் குற்றமற்ற திருமேனி என உரைப்பர் நிரம்ப அழகிய தேசிகர். அப்பொருட்கு "அறிஞர்க்கறிவாம் உருவம் உடையான் உளன்" என்றது ஒத்து நோக்கற்பாலது.



89. ஆசின்நவா நாப்பண் அடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

ஆசின் — ஆணவ மலத்தின் வாதனை காரணமாக, நவா நாப்பண் அடையாது — சகல நிலைக்கும் அருள் நிலைக்கும் இடையே உள்ள "நான்முதல்", "நான் சிவசமம்" என்னும் பசு அறிவு நிலைகளில் அடையாமல், அருளினால் — முற்றிலும் திருவருள் வயப்பட்டு அடங்கி நிற்றலால், வாசி இடை நிற்கை வழக்கு — அருள் நிலைக்கும் இன்புறு நிலைக்கும் இடையில் நிற்றல் முறை ஆகும்.

"சிவாய நம" என்னும் முறையில் ஆன்மா ந, வா இடை நிற்கின்றது. பின், **ய** ஆனது **வா** வில் ஒன்றிச் **சி** யைப் பெற்றுச் **சி** அல்லது **வா** வில் ஒன்றி நிற்றல் வேண்டும் என்பது.

இவ்வதிகாரத்தில் கூறுவனவற்றைச் செபித்தலாகிய ஓதுமுறைக்கு மட்டும் உரியனவாகக் கொள்ளுதல் கூடாது; அவ்வம் முறையில் குறிக்கப்படும் ஆன்மாவின் உணர்வுநிலைகளில் அறிவை நெறிப்படுத்தி நிற்பித்தற்கு உரியவை. அம்முறை நிற்கும் முறை எனப்படும். "ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது...... நாதன் நாமம் நமச்சிவாயவே" என்னும் ஆளுடையபிள்ளையார் அருளுரையின் குறிப்பு நிற்குமுறையின் மேலது எனக்கொள்க.

90. எல்லா வகையு மியம்பும் இவனகன்று
நில்லா வகையை நினைந்து.

இவன் — ஞான உபதேசத்தைப்பெற்ற இந்தச் சீவன் முத்தன், அகன்று நில்லா வகையை நினைந்து — அருள் நிலையினின்றும் நீங்கிப் பசுஞான பாசஞானங்களில் நில்லாமைக்குச் சாதனமாக உள்ள உபாயங்களை எண்ணி, எல்லாவகையும் இயம்பும் — பலவகையான உபாயங்களையும் நூல்கள் எடுத்துக்கூறும்.

நூலை இயற்றுவோர் செயலாகிய நினைத்தலையும் இயம்புதலையும் நூல் மேலேற்றிக் கூறினர். பலவகை உபாயமாவன: முத்தி பஞ்சாக்கரத்தை முறை அறிந்து ஓதி நிற்றலும், ஞானபூசை இயற்றலும், மெய்யன்பரோடு இணங்குதலும், குருலிங்க சங்கம வழிபாடும் முதலியன.

இப்பாட்டு பின்வரும் அணைந்தோர் தன்மை என்னும் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்து நின்றது.

---

## ௧௦. அணைந்தோர் தன்மை

[சிவப்பேறு ஆகிய நிட்டை நிலை எய்தினர் பாச வாதனைபற்றி உலகமுகப்படின், அவர் உலகநெறியிற் சென்றுவிடாமல் அருள் நிலையில் நிலைத்து மீண்டும் இன்புறு நிலையில் நிலை கொள்ளுதற்பொருட்டு இன்றியமையாது மேற்கொள்ள வேண்டிய ஞான ஒழுக்கங்களைக் கூறுவது.]

91. ஓங்குணர்வி னுள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்.

ஓங்கு உணர்வின் — (சீவன் முத்தர்) தம் உணர்வை அடங்கச் செய்து மேம்பட்டு நிகழும் சிவஞானத்துள் அடங்கி நின்று, உள்ளத்துள் — தம் உணர்வின்கண், இன்பு ஒடுங்க — பேரின்பம் நிறைந்து நிற்க, தூங்குவர் — தம்செயல் இன்றி நிற்பர். மற்றுசொல் ஏதுண்டு — வேறு சொல் அங்கு யாது உளது?

முத்தி நிலையாவது திருவருளில் அடங்கி நிற்றலே ஆம் என்பது கருத்து. கற்றுணர்ந்தடங்கல் என வழங்கும் வழக்கும் சிந்தித்தற்குரியது.

92. ஐந்தொழிலுங் காரணர்க ளாந்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலு மேவார் மிக.

ஐந்தொழிலும் — (மெய்யுணர்வுடையோர்) இறைவனைப் போல நின்று ஐந்தொழில் செய்தலையும், காரணர்கள் ஆம்தொழிலும் — அயன், மால், உருத்திரன், ஈசன், சதாசிவன் என்னும் காரணக் கடவுளர்களில் ஒருவனாய் நின்று அதிகாரம் செய்தலையும், போகநுகர் வெந்தொழிலும் — உலக இன்பத்தை நுகர்வதாகிய கொடியதொழிலையும், மிகமேவார் — சிறிதும் விரும்பமாட்டார்கள். மேவுதல் — விரும்புதல்.

சிவன் திருவடியில் அடங்கி நின்று பெறும் பேரின்பம் இத்தொழில்களால் வரும் இன்பங்களினும் பன்மடங்கு சிறந்ததாய் இருக்கும் என்பது கருத்து.

93. எல்லா மறியு மறிவுறினும் ஈங்கிவரொன்
றல்லா தறியா ரற.



எல்லாம் அறியும் அறிவு — எல்லாவற்றையும் அறியும் இயல்புள்ள சிவஞானத்தை, உறினும் — பெற்றிருந்த போதிலும், ஈங்கு இவர் — சுத்தநிலையில் உள்ள இந்தச் சீவன் முத்தர், ஒன்று அல்லாது — ஏகம் எனப்படும் சிவபரம் பொருளை அன்றிப் பிறிது எதனையும், அற அறியார் — சிறிதும் அறிதலைச் செய்யார்.

94 புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர் போதார்
தலநடக்கும் ஆமை தக.

தலம் நடக்கும் ஆமைதக — நிலத்திற் செல்லும் ஆமையைப் போல, புலன் அடக்கி — உலக விடயத்திற் செல்லும் தம் அறிவை அவ்வாறு செல்ல விடாமல் தடுத்து, தம் முதற்கண் — தம் உணர்விற்கு முதலாக உள்ள சிவஞானத்தின்கண், புக்கு உறுவர் — அடங்கி நின்று அதனையே சேமமாகக் கொண்டுநிற்பர், போதார் — உலகை நோக்கி வரமாட்டார்.

நிலத்தில் நடக்கும் ஆமை தனக்கு இடையூறு பயக்கும் பொருள் எதிர்ப்பட்டால் தன் நான்கு கால்களையும் முகத்தையும் தனக்குப் பாதுகாப்பாக உள்ள ஓட்டிற்குள் அடக்கிக்கொண்டு அசைவற்றுக் கிடக்கும்; இடையூறு அகன்றபின் மீளவும் முகத்தை வெளியே நீட்டி நடக்கும். ஆனால், சீவன் முத்தர் எப்பொழுதும் சிவஞானத்தின் நீங்கிப் புறத்தே வாரார் என்பது தோன்ற '**போதார்**' எனக் கூறினர்.

95. அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கும்
இவனையொழிந் துண்டாதல் இல்.

அவனை அகன்று — முதல்வனுக்கு வேறாக, எங்கு(ம்) இன்றாம் — எல்வுலகமும் இல்லையாம், ஆங்கு — அதுபோல, அவனும் இவனை ஒழிந்து — தன்கரணங்களெல்லாம் சிவகரணங்களாகப் பெற்றுச் சீவன் என்னும் பெயர் நீங்கிச் சிவனாக நிற்கும் முத்தான்மாவை விட்டு, எங்கும் இல்லை — எவ்வுலகமும் இல்லையாம்.

உலகம் சிவனைத் தாரகமாகவும் தலைவனாகவும் கொண்டு ன்றுற்போல அவனைத் தலைப்பட்டுணராத பெத்தான்மாக்கள் சீவன் முத்தனைச் சார்பாகவும், தலைவனாகவும் கொண்டு உறுதியை உணரும் என்பது கருத்து. அறம் முதலாகிய உறுதிப் பொருள்களை உள்ளவாறு உணர்த்த வல்லார் சீவன் முத்தரே என்றபடி.

96. உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேதும் இல்.

உள்ளும் — அகத்தே விளங்கும் சிவத்தையும், புறம்பும் — புறத்தே காணப்படும் உலகையும், ஒரு தன்மைக் காட்சியருக்கு — ஒரே தன்மையாய்க் காணும் மெய்யுணர்வுடையாருக்கு, எள்ளும் திறம் ஏதும் இல் — இகழ்தற்குரியதாக எப்பொருளும் இல்லையாம்.

சிவஞானிகளுக்கு உலகமும் சிவமயமாய்த் தோன்றும். ஆதலால் எப்பொருளையும் அவர் வெறுக்கமாட்டார். "எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி" என்பது அப்பர் வாக்கு.

97. உறுந்தொழிற்குத் தக்க பயனுலகம் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

தம் உறும் தொழிற்கு — பிறப்பு நிலையில் உயிர்களுக்கு யான் எனது என்னும் செருக்கோடு பொருந்தி நிகழும் நல்வினை தீவினைகளுக்கு, தக்க பயன் உலகம் — உரிய பயன் உலக இன்பத் துன்பங்கள், தம் வறுந்தொழிற்கு — சீவன் முத்தர்கள் திருவருள் வயப்பட்டுச் செய்யாமற் செய்யும் செயலுக்கு, பயன் வாய்மை — உரிய பயனாய் உள்ளது மெய்ப்பொருளாகிய சிவபோகமே ஆகும்.

98. ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும்.

ஏன்ற வினை — உடல் முகந்து வந்தவினையாகிய பிராரத்தம், உடலோடு ஏகும் — சிவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலால் சீவன் முத்தர்க்கு உடல் ஊழாய்க் கழியும் (ஆதலால் பிராரத்தத்தை நுகரும்போது உண்டாகும் விருப்பு வெறுப்புப் பற்றிப் பின் ஏறும் வினையாகிய ஆகாமியம் விளையாது), இடை ஏறும் வினை தோன்றில் அருளே சுடும் — அங்ஙனமன்றி ஒருகால் இடையே வரும் வினையாகிய ஆகாமியம் தோன்றுமாயின் அதனைப் பஞ்சை எரிக்கும் தீயைப் போலச் சிவஞானமே கெடுத்துவிடும். சஞ்சிதம் நிர்வாண தீக்கையில் கழிக்கப்பட்டது. இதனால் சீவன்முத்தர்க்கு வினைத்தொடர்பு இல்லையாம் என்பது கூறப்பட்டது.

99. மும்மை தருவினைகள் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம்.



மூதறிவார்க்கு — மேலாய சிவஞானம் பெற்றவர்க்கு, மும்மை தரும் வினைகள் மூளாவாம் — மனவாக்குக் காயங்களால் தரப்படும் வினைகள் முன்பாட்டில் கூறியபடி தொடர்ந்து கிளர்ந்து எழுதல் இல்லை. அம்மையும் இம்மையே ஆம் — அவர்க்கு இவ்வுடம்பு நீங்கிய பின் எய்தும் பேரின்ப நுகர்ச்சியாகிய பரமுத்தி நிலையும் உடம்போடு கூடியுள்ள இப் பிறப்பிலேயே விளையும். உடம்பு நீங்கிய காலத்து நிலை வேறுபடுதல் இல்லை என்பது கருத்து.

சீவன் முத்தநிலையும் பரமுத்தி நிலையும் பேரின்ப நுகர்ச்சிக்கண் நிகழும் இயல்புகள் பற்றி ஒன்றேயாம். ஆயினும் சீவன் முத்திநிலையில் உடம்பும் உடம்பு முகந்த பிராரத்தமும் இருத்தலினால் ஒருகால் திருவருளின் நீங்கி பசு பாச ஞானங்களின் தொடக்குண்ணும் வீழ்ச்சி ஏற்படுதல் கூடும். பரமுத்தி நிலையில் அவ்வீழ்ச்சிக்கு இடமில்லை. அவ்வீழ்ச்சி நேராதிருத்தற் பொருட்டே சீவன் முத்தர் ஞானபூசை மேற்கோடல், முத்தி பஞ்சாக்கரம் செபித்தல் முதலிய ஒழுக்கங்களில் தலைநிற்பர். இவ்வியல்புகளெல்லாம் சமயாசிரியர்களாகிய நால்வரிடத்து இருந்தமை நினைத்தற்குரியது.

100. கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

கள்ளத் தலைவர் துயர் கருதி — சுதந்திரம் இல்லாதிருக்கவும் அது இருப்பதாக எண்ணி வினைகளை ஈட்டும் பெத்தான்மாக்களின் பிறவித் துன்பங்களை எண்ணி, தம் கருணை வெள்ளத்து மிக அலைவர் — சீவன் முத்தர்கள் தமக்கு இயல்பாக உண்டாகும் பெருங் கருணையினால் மிகவும் அலைக்கப்பட்டுத் தம் அருள் வாழ்க்கையாலும் வாய்மொழிகளாலும் உறுதிகளை உணர்த்துவர்.

**திருவருட்பயன் உரை முற்றிற்று.**

---

## பிற்சேர்க்கை

51. நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும்இறை சத்தி கொளல்.

உயிர்கள் வேறுவேறு உடம்புகளை உடையனவாய் வேறுவேறு வகையில் இன்பத் துன்பங்களை நுகர்ந்து வருதலைக் காண்கிறோம். இவ்வேறுபாடுகளுக்குக் காரணம் அந்த அந்த உயிர் முன் செய்து கொண்ட வினையில் உள்ள வேறுபாடே ஆகும். வினைகள் நல்வினை தீவினை என இருவகைப்படும். நூல்களில் விதித்தபடி செய்வன நல்வினை; அவற்றின் பயன் இன்பம். நூல்களின் விதிக்கு மாறாகச் செய்வன தீவினை; அவற்றின் பயன் துன்பம்.

மேலும், வினை தோன்றி, நின்று, பின் விளையும் மூன்று நிலைகள் பற்றி முறையே ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் மூன்று பெயர்களால் வழங்கப்படும். வினைகள் முயற்சி வடிவில் தோன்றும் நிலையில் ஆகாமியம் எனப்படும்; இது தூலவினை எனவும்படும். அம்முயற்சியின் வாசனை ரூபமாக அருவமாய்ச் செய்தவனது புத்தியைப் பற்றி மாயையிற் கட்டுண்டு நிற்கும். இந்நிலையில் அது சஞ்சிதம் எனப்படும்; இது சூக்குமவினை, புண்ணிய பாவம், அபூருவம் என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும். இறுதியில் அவ்வினைகள் ஒன்றும் பலவும் சேர்ந்து இன்பத் துன்பமாய் அனுபவத்திற்கு வரும்போது பிராரத்தம் எனப்படும்.

தான் உழுது விதைத்துப் பயிர் செய்த நிலம் விளையும்போது அவ்விளையுளை அறுவடையாகிய முயற்சியைக் கொண்டே ஒருவன் பெறுகின்றான்; பெட்டியில் வைத்த பொருளைப் பயன்படுத்தக் கருதும்போது திறந்தே எடுக்க வேண்டியுள்ளது. இவைபோல, முன் செய்த வினைகளில் ஒரு பாகம் அனுபவத்திற்கு வரும்போது அதனை முயற்சியோடு கூடியே ஒருவன் அனுபவிப்பன். இங்ஙனம் பிராரத்த அனுபவத்திற்குத் துணையாக நிகழும் முயற்சியே மேலைக்கு வினையாக, ஆகாமியமாய் வருகிறது. உணவின் பொருட்டு விளைந்த கனி முதலியவை மேலைக்கு வித்துமாய் வருதல் போல, பிராரத்த நுகர்ச்சிக்குத் துணையாய் நிகழும் முயற்சி நாம் செய்கின்றோம் என்னும் முனைப்போடும் விருப்பு வெறுப்போடும் செய்யப்படுதலின் மேலைக்கு வினையாய் வரும் என உணர்தல் வேண்டும்.

இங்ஙனம் தொடர்ந்து வரும் வினைத் தொடர்ச்சி எப்போது அறும் என்னும் கேள்வி எழும். நாம் முன் செய்த வினைப்பயனை இறைவன் நுகர்விக்கின்றான் என முதல்வனது திருவருளை உணர்ந்து விருப்பு வெறுப்பும் தன்முனைப்பும் இன்றி வாழும் நிலை ஒருவனுக்கு வரும்போதுதான் ஆகாமியம் என்னும் மேலைக்கு வினை ஏறாது.

ஆணவமலம் தன் சத்தி கெடாது உள்ளவரை ஒருவனுக்கு யான் எனது என்னும் செருக்கும், விருப்பு வெறுப்புக்களும் இருந்தே தீரும். அம்மல சத்தி கெடுதற் பொருட்டு முதல்வனது இயல்பைப் படிமுறையில் உணர்ந்து சார்தற்குச் சாதனமாகச் சிவாகமங்களில் விதிக்கப்பட்டவையே சரியை கிரியா யோகம் எனப்படும் சிவபுண்ணியங்கள். இவை திருவருளின் உண்மைநிலையை ஒருவன் உணர்வில் விளங்கும்படி செய்து நல்வினை தீவினைகளும் அவற்றின் பயன்களும் பிறவிக்கே ஏதுவாவன எனச் சமமாக உணர்ந்து இரண்டையும் விடும் பக்குவ நிலை ஒருவன் அறிவில் நிகழும். இந்நிகழ்ச்சியை இப்பாட்டு **"இருவினைகள் நேராக நேராதல்"** எனக் குறிக்கின்றது. நேராக — சமமாக, நேராதல் — நிகழ்தற்கண்; "கறைமிடறு அணியலும் அணிந்தன்று" என்பதில் பின்நின்ற அணிந்தன்று என்னும் வினை பொதுவினையாய்ச் செய்தது எனப் பொருள்படுதல் போல, இங்கும் **நேராதல்** என்பது பொதுவினையாய் நிகழ்தல் என்னும் பொருள் குறித்து நின்றது. ஒருவன் அறிவில் நிகழும் இக்குறி அல்லது செவ்வி இருவினை ஒப்பு எனப்படும்.

உ

# தொகுப்புரை

## 1. பதிமுதுநிலை

எழுத்துக்கள் உயிர், மெய் என இருவகைப்படும். அவற்றுள் முதலில் நிற்கும் அகரம் இயல்பாய்த் தோன்றுவது; மேலும் பிற எழுத்துக்களோடு கலந்து நின்று அவற்றைச் செலுத்துவது. அது போல, காணப்படும் உலகமும் அறிவுடைப் பொருள்களாகிய உயிர் களும், அறிவில்லாத சடப்பொருளும் என இருவகைப்படும்; உயிர் கள் தாமே அறியமாட்டா; அறிவிக்க அறியும் இயல்புடையன. ஆதலால், உயிர்களையும் பிற பொருள்களையும் அறிவிக்கவும் தொழிற் படுத்தவும் இயல்பாகவே முற்றுணர்வுடைய ஒரு முதல்வன் உளன். அவன் அறிவே வடிவாய் எல்லாப் பொருள்களிலும் கலந்து புலப் படாது நிற்கின்றான்.

உயிர்கள் என்றும் உள்ளவை. அவை உடம்போடு கூடிப் பிறந் தும் இறந்தும் துயரடைந்து வரும். அவை பிறப்பின் நீங்கி நிலைத்த பேரின்பத்தை அடையும்படி செய்ய வல்லவன் முதல்வன்; அவ் வல் லமை அவனுடைய சத்தி எனப்படும். நெருப்பிற்குச் சூடு போல வும், மலருக்கு மணம் போலவும், சூரியனுக்கு ஒளிபோலவும் முதல்வனுக்கு உள்ள அக்குணம் அவனோடு பிரிப்பின்றி அபேதமாய் நிற்கும். இவ்வாறு முதல்வன் சத்தியோடு நீக்கமின்றி நிற்றலால் சைவ சமயத்தவர்கள் முதல்வனை அம்மையப்பர் எனப் பாவித்து வழிபடுகின்றார்கள்.

முதல்வன் பெரியதிற் பெரியதாயும், சிறியதிற் சிறியதாயும், பேரருளாளனாயும், உயிர்களின் அறிவிற்கு அப்பாற்பட்டவனாயும் உளன். அவன் உயிர்களின் பொருட்டு ஆக்கல், காத்தல், அழித் தல் என்னும் முத்தொழில்களைச் செய்வன். சிவஞானிகளே அவன் றன் வியாபகமாகிய ஞானவுருவைக் காண்குவர்; ஏனையோர்க்கு அவன் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று திருமேனி களை உடையவனாய் நின்று அருள்புரிவன்.

உயிர்கள் தமக்கு உடம்பையும் உலகையும் படைத்துக் கொடுக் கும் ஒரு தலைவனை உடையவை; அதுபோல இறைவனுக்கு மேலே ஒரு தலைவன் இல்லை; தானே திருமேனி கொள்வன்.



இறைவன் எவ்விடத்தும் எப்பொருளிலும் கலந்து நிற்பினும் அவற்றுடன் தொடக்குறுதல் இல்லை. அவன் தன் ஆணை வழிநின்று அன்பு செய்வார்க்கு அவர்தம் உள்ளத்தை விட்டு அகலாது நிற்பன்; ஏனையோர் தேவராயினும் காண்டற்கு அரியன். அவன் உயிர்களுக் குச் சுகத்தைச் செய்தல் பற்றிச் சங்கரன் என்னும் பெயரை உடை யவன்; ஆயினும், அவனை மனமொழி மெய்களால் வந்திப்போர்க்கு அன்றி அவ்வின்பம் உளதாகாது. இத்தகைய முதல்வனது இருப்பை உளங்கொண்டு நினைந்து நன்னெறி நிற்பார்க்குப் பிறவிப் பிணி நீங்கி வீட்டின்பம் சித்திக்கும்.

---

## 2. உயிரவை நிலை

உயிர்கள் எண்ணிலாதவை; அவற்றுள் முத்தி பெற்ற ஆன்மாக் களும் அளவில்லை, இனிப் பெறுதற்கு உரிய உயிர்களும் அளவில்லை; அவற்றை விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூன்று வகை யுள் வைத்து அறியலாம். எல்லா உயிர்களும் மூலமலம் எனப்படும் ஆணவமலம் உடையவை; பிரளயாகலர் ஆணவமும் கன்மமும் உள்ள இரு மலத்தாராவர்; சகலர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றாலும் கட்டுற்றவர். எல்லா உயிர்களும் முதல்வனுக்கு அடிமைகளே ஆகும். சகலர் தாம் அடிமை என்பதை உணரார்; ஏனையர் உணர்வர்.

உயிர்கள் அறிவுள்ளனவே ஆயினும், அவ்வறிவு நிலையானதன்று. நனவிற் கண்ட உண்மைகளைக் கனவு நிலையில் முற்றிலும் மறக்கும். நனவு நிலையிலும் ஐம்பொறி முதலியவற்றின் மூலமாகவே பொருள் களை அறியும்.

உயிரின் தன்மையைக் கண்ணின் தன்மையோடு ஒப்பிட்டு அறிய லாம். இருள் பொருள்களைக் காணவொட்டாமல் கண்ணை மறைக் கும்; அதுபோல, ஆணவமலம் உயிரின் அறிவை மறைக்கும்; ஒளி இருளை நீக்கிப் பொருளைக் காட்டும்; அதுபோல, உடம்பும் ஐம் பொறி முதலிய கருவிகளும் ஆணவத்தால் வரும் மறைப்பை நீக்கி நம் அறிவை விளக்கும். முதல்வனது திருவருள் சூரியன் போன்ற பேரொளி ஆகும்; அதைப் பெறும் நிலை உயிர்க்கு வரும்போது எல்லாப் பொருளும் இனிது விளங்கும்.

முதல்வன் மாறுதல் இல்லாதவன்; ஆதலால் சத்து எனப்படு வன்; எக்காலத்தும் ஒரே தன்மைத்தாய் இருப்பது சத்து எனப் படும். உலகம் மாறுதல் அடைவது, ஆதலினால் அது அசத்து எனப்

படும். சத்தாகிய முதல்வன் உலகத்தை அனுபவியான்; உலகம் அறிவில்லது ஆதலால், அது முதல்வனை அறியாது. சத்தையும் அசத்தையும் சார்ந்து அறிந்து நுகர்வது ஆன்மாவேயாம். சத்தைச் சார்ந்து சத்தாயும் அசத்தைச் சார்ந்து அசத்தாயும் நிற்கும் இயல்பு பற்றி ஆன்மா சதசத்து எனப்படும். ஆன்மாவின் இயல்பை ஆகாயம், படிகம் என்பவற்றோடு ஒப்பிட்டும் அறியலாம்.

ஊமன் கண்ணுக்குப் பகலிலும் சூரிய ஒளி தெரியாது; அது போல, உயிர்கள் திருவருளாகிய ஒளியில் மூழ்கி இருப்பினும் அத் திருவருளைக் கவரமுடியாதவையாய் உள்ளன; இதற்குக் காரணம் அவை அநாதியாகவே ஆணவத்தைப் பற்றி நிற்பதேயாம். ஆணவம் நீங்கித் திருவருளை உணரும்போதுதான் உயிர்க்குத் துன்பம் நீங்கிப் பேரின்பப் பேறு கிடைக்கும்.

## 3. இருள்மல நிலை

பிறவியால் வரும் துன்பங்களும், அதற்குக் காரணமும், பிறவிப் பிணி நீங்கியபின் எய்தும் பேரின்பமும், அதற்குத் துணையாக நிற்கும் பொருளாகிய திருவருளும் ஆராய்ச்சி அறிவால் உள்பொருள்கள் என்று தெளியப்படும். இவற்றினது உண்மை மக்கள் அறிவுக்குப் புலப்படாமைக்குக் காரணம் இருள் போன்றதாகிய ஆணவ மலத்தின் பிணிப்பேயாகும். இருள் புறத்தேயுள்ள பலவகைப் பொருள்களையும் வேறுபாடு தோன்றாதபடி மறைத்துத் தன்னையே காட்டி நிற்கும்; அதுபோல, ஆணவமும் உயிரையும் கடவுளையும் மறுபிறப்பையும் இருவினைகளையும் தோன்றாதபடி அகத்தேயுள்ள அறிவொளியை மறைக்கும். புறவிருள் பிறபொருள்களைக் காணவிடாது மறைக்குமேயன்றித் தன்னை மறைப்பதில்லை. ஆதலால் இருள் உள்ளபோது அதைப் போக்க வழி தேடுகின்றோம். ஆனால், அகவிருள் தான் உயிரோடு கூடியிருப்பதைக் கூடக் காட்டுவதில்லை; அதனால்தான் மக்கள் தங்கள் அறியாமையைப் போக்கிக்கொள்ள நினைப்பதில்லை.

ஆணவம் உயிர்களை அநாதியாகவே பற்றி உள்ளது. திருவருளும் உயிர்க்குயிராய் இருப்பினும், இவ்வாணவ இருள் திருவருளைப் பற்ற முடியாது உயிரின் அறிவை மட்டும் பற்றி நிற்கும். அப்படிப் பற்றி நின்று, அவ்வறிவு திருவருளை உணராதபடி தடைசெய்து வருகின்றது. ஆணவமலம் ஒன்றேயாயினும், எண்ணிறந்த உயிர்களை எல்லாம் கூடி மயக்கும் ஆற்றல் வாய்ந்தது. அறியுந்



தன்மை உள்ள உயிர்கள் அறிவித்தால் அன்றி அறியாதபடி செய்வதே ஆணவத்தின் செயல் எனச் சுருங்கக் கூறலாம். இது துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணமாம்; இதை உயிரின் குணம் எனக் கொள்ளுதல் தவறு; குணமாயின், அறியாமையை நீக்கும்போது உயிரும் அழிந்துபோம்; பேரின்பநிலை என்பது ஒன்று இல்லையாய் முடியும். எனவே ஆணவத்தை உயிரின் குணம் என்றல் பொருந்தாது.

பிறப்பு நிலையில் இத்தகைய ஆணவம் மேம்பட்டு இருப்பினும் உயிர் பக்குவ முதிர்ச்சி வரும்போது ஒளியாகிய திருவருளைக் கவரும்; அஞ்ஞான்று ஆணவம் தன் வலி முழுவதும் கெட்டு அகலும்.

பிறப்பு நிலை இரவு போன்றது; திருவருளைப் பெற்றின்புறும் நிலை சூரியன் உதிக்கப்பெற்ற பகற் காலத்தைப் போன்றது. இருள் நீங்கும் வரையும் அதனை ஓரளவு நீக்கி உதவும் விளக்கினைப் போல, உயிர் திருவருளைப் பெறும்வரை மாயையானது வினைக்கீடாகத் தனு கரண புவன போகங்களைத் தந்து சிற்றறிவை விளக்கி நிற்கும். ஆணவமும் மாயையும் இருளும் ஒளியும்போல் இகலி நிற்பன. சிவ ஞானத்தின் முன் இரண்டன் வலிகளும் கெடும்.

## 4. அருளது நிலை

இம்மை மறுமைகளில் இன்பத்துக்குக் காரணமாக உள்ளவற்றில் திருவருளைப் போல் தலையாய பொருள் வேறில்லை. அஃது உயிர்கள் வினைகளை ஈட்டுவதற்கும் அவற்றின் பயனை நுவர்வதற்கும் உதவி செய்வதாய்ப் பேரொளியாய் உள்ளது. உயிர்கள் தத்துவங்களால் ஆகிய உடம்போடு கூடியே எதையும் அறியும்; அவற்றை அத் தத்துவங்களைக் கூடும்படி செய்து அறிவை விளக்குவது திருவருளே. உயிர்களுக்கு வாழ் இடமாக உள்ளதும் திருவருளே; ஆயினும், அவை திருவருளை அறிந்து அனுபவிப்பதில்லை; திருவருளை ஆதாரமாகக் கொண்டுள்ள மாயையின் காரியமாகிய பொருள்களையே அறிந்து பற்றி மயக்கத்தில் ஆழும். இது பாற்கடலில் வாழும் மீன் அப்பாலை உண்ணாது அங்கு மிதக்கும் சிறு பூச்சிகளை நுகரக் கருதுவதை ஒக்கும். உறியில் உள்ள பாற்குடத்தின் மேல் உள்ள பூனை பாலை உண்ணக் கருதாமல் சுவரில் ஓடும் கரப்பை என்னும் சிறு பிராணியை உண்ண முயல்வதனையும் இதற்கு ஒப்பிடலாம். திருவருளின் உண்மையை உணராதிருத்தல் நிலத்தை உணராது அதன் மேல் நடத்தலையும், மலையும் விண்ணும் இருந்தும் அவற்றைக் கருதாமையும் போன்றது.

திருவருள், வழிப்போக்கனுக்குப் பின்வரும் துணைவனைப் போல, நம் உணர்வுக்கு உணர்வாய் உடன் நின்று உதவுவது. பகலில் சூரியனது ஒளி போலவும், ஆற்றைக் கடப்போனுக்கு அவ்வாற்றில் உள்ள நீர் போலவும் திருவருள் நம்மை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து இருப்பினும் சஞ்சலப்படும் மனத்தால் அதனைக் கருதாமல் இருக்கின்றோம். அதனைச் சிந்தித்து உணர்ந்தாலன்றி உயிர்களுக்கு உறுதி என்பதில்லை.

## 5. அருளுரு நிலை

உயிர்க்கு உயிராக நின்று உணர்த்தி வந்த திருவருளே உயிரின் பக்குவ நிலையை உணர்ந்து மக்கள் வடிவந் தாங்கிக் குருவாக வெளி வருகின்றது. ஆதலால் ஞானகுரவனை முதல்வன் எனவே தெளிந்து வழிபடல் வேண்டும். நிலையாத உடல் வாழ்க்கை, அறியாமை இரண்டும் உடையவர்கள் ஞான மயமாகிய திருவருளையும் அதன் பிழம்பாக வரும் குருமூர்த்தியின் அருமையினையும் சிறிதும் உணரார். மானைக் காட்டி மானைப் பிடிப்பவர் போல மக்களை ஆட்கொள்வதற்காக முதல்வன் மேற்கொண்ட மானுடச் சட்டையே குரு வடிவம். கலை பயில்வோர் அவ்வத்துறைகளில் வல்லவர்களையே நாடிச் செல்வதுபோல முதல்வனது அருளுக்கால் அன்றி ஆன்மாவின் உண்மை இயல்பை அறிதல் இயலாது. பாம்பினால் கடியுண்டவர் மேல் கீரி வந்து புரண்டாலும் நஞ்சு இறங்காது; கீரிக்கு உரிய மந்திர பாவனையுடையோன் நோக்கினால்தான் நஞ்சு இறங்கும். அதுபோல, திருவருள் உயிர்க்குயிராய் நிற்பினும் மூலமலமாகிய நஞ்சு நீங்குவதில்லை; ஞான குரவனாக நின்று பாவித்து நோக்கினால் தான் நீங்கும்.

காணப்படாத இறைவன் குருவாய் வந்து ஆட்கொண்டால் ஒழிய அவனது உண்மை நிலையை உலகத்தார் உணரமாட்டார். சூரிய காந்தக்கல் சூரியன் முன்னிலையில் நெருப்பைத் தருதல் போல, ஞானகுரவன் முன்னிலையில் ஒருவனுக்கு அகத்தே மெய்யுணர்வு தோன்றும். இங்குக் கூறிய அனைத்தும் சகலர்க்கு அருளும் முறை. ஏனைய விஞ்ஞானாகலர், பிரளயாகலர்க்கு முதல்வன் உண்ணின்றும், தேவகுருவாய் முன்னின்றும் திருவருள் பாலித்துப் பாவப் பிணியை நீக்குவான்.



## 6. அறியும் நெறி

இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்பவை நிகழப் பெற்றார்க்கே ஞானகுரவன் உணர்த்தும் ஞானத்தினை உணர்தல் கூடும். இருவினை ஒப்பாவது புண்ணிய பாவங்களின் பயனை ஒப்பாக எண்ணி இரண்டிலும் விருப்புவெறுப்பு அற்றிருத்தல். மலபரிபாகம் என்பது மலசத்தி மெலிந்து நீங்குதற்கு உரிய பருவத்தை அடைதல். சிவபுண்ணியங்களைப் பயன் கருதாது செய்து வருவார்க்கு இவ்விரண்டும் உண்டாகும். அந்நிலையில் முதல்வனது மறைத்தற் சத்தி அருளாக மாறி ஆன்ம உணர்வில் பதியும். இதுவே சத்திநிபாதம். இது நிகழப் பெற்றோர் பிறவியை வெறுத்து வீடு பேற்றை அவாவி நிற்பர்.

இங்கு உணரத்தக்க உண்மைகள் இரண்டு. கடவுள், உயிர்கள், மூலமலம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என்னும் ஆறும் அநாதி நித்தியப் பொருள்கள் என்பது ஒன்று. மற்றொன்று செய்வினையும் வினைப்பயனும் செய்வானும் சேர்ப்பானும் என்னும் நான்கும் உள்ளன என உணர்ந்து ஒழுகுதல்.

இவற்றுக்கு மேல் உணரப்படுவது உயிர்க்கும் முதல்வனுக்கும் உள்ள சம்பந்தம். உயிர் உடம்பிற் கலந்து நிற்றல் போல, முதல்வன் உயிர்களிற் கலந்து ஒற்றுமைப்பட்டு உளன்; காணுங்கண் விளக்கொளியாலன்றிக் காணமாட்டாது; அது போல, அறியும் உயிர் முதல்வனது அருள் அறிவித்தாலன்றி அறியாது. பொறிகள் உயிரால் செலுத்தப்படுதல் போல உயிரும் முதல்வனால் செலுத்தப்படும். இம்மூன்று இயல்பும் ஒன்றாய் வேறாய் உடனாதல் எனப்படும்.

ஒரு படிகம் பக்கத்தில் வைக்கப் பெற்றுள்ள பொருள்களின் நிறங்களைப் பற்றி அந்தஅந்த நிறத்தோடு தோன்றுதலும் அவற்றைப் பற்றாது தன் தூய ஒளியே விளங்கி நிற்றலும் என இரண்டு இயல்புகளை உடையது. ஒன்று பொதுவியல்பு, மற்றொன்று சிறப்பியல்பு. இவ்விரண்டையும் அதற்கு விளங்கச் செய்வது சூரிய ஒளியே ஆகும். அதுபோல ஆன்மாவுக்கும் இரண்டு இயல்பு உண்டு. ஒன்று ஐம்பொறிகள் அந்தக்கரணம் முதலிய தத்துவங்களைச் சார்ந்து அவற்றின் தன்மைகளைப் பற்றி அவையேயாய்த் தோன்றுதல். இது பொதுவியல்பு. மற்றொன்று அவற்றை இது இது எனச் சுட்டித் தனக்கு வேறாகக்கண்டு, அவற்றின் நீங்கி நிற்றல். நீங்கும் போது திருவருளே தன்னிடத்துத் தோன்றும்; இங்ஙனந் தோன்றும் இயல்பே சிறப்பியல்பு. ஆசிரியன்கூறும் அறிவுரையின்படி தன் அறிவை நெறிப்படுத்தி, முப்பத்தாறு தத்துவங்களையும் தனக்கு வேறா

கக்கண்டு தற்போதமும் உலகப்பற்றும் இன்றி நிற்பின், ஒருவன் உணர்வில் திருவருள் ஒளியாகிய சிவஞானம் விளங்கித்தோன்றும். தோன்றிய பின் அதில் கலந்து யான் எனது என்னும் செருக்கின்றி அடங்கி நிற்பின் அருளுக்கு முதலாகிய பேரின்பச் சிவம் ஆன்மாவைத் தன்னுட்கரந்து ஓங்கும். அங்கு நிகழும் பேரின்பம் நுகர்ந்து அடங்கி நிற்றலே செய்யற்பாலது.

---

## 7. உயிர் விளக்கம்

திருவருளை ஆன்மா உணரும் வரையில் ஆணவம், கன்மம், மாயைகளில் தோய்ந்து அசுத்தப்பட்டிருந்தது. சிவஞானம் பெற்ற பின் அவ்வசுத்தத்தைப் பற்றறத் துடைப்பதே உயிர் விளக்கம் அல்லது ஆன்ம சுத்தி எனப்படும். வெயிலில் வந்தான் ஒருவன் நிழலைத் தலைப்பட்டால் தானே அந்நிழலை விரும்பி அடைவான்; அதுபோல, ஒருவன் உணர்வில் சிவஞானம் வெளிப்படின் அவன் இயல்பாகவே அதன் வயப்பட்டுப் பேரின்பச் சிவத்தைப் பெற்று இன்புறுவன். ஆயினும் பித்தம் நீங்காத நாவிற்கு இனிய பாலும் கைப்பதுபோல, பசுத்துவ வாதனை நீங்காத உணர்வு அங்ஙனம் பேரின்பத்தைத் தலைப்படாமல் ''நான்பிரமம்'' எனவும், ''யானே எல்லாம் செய்ய வல்லேன்'' எனவும் செருக்குற்று நிற்கும். இச் செருக்கு உள்ள வரை பிறவி அறுவதும் இல்லை, சிவாநுபம் எய்துவதும் இல்லை.

இதுவரை அறியாமையில் இருந்த உயிருக்கு அதன் உண்மையியல்பைத் திருவருளே விளக்கவும், அதைக் காணமாட்டாது யானே என் உண்மையியல்பைக் கண்டேன் என எண்ணுவது அவசியமின்றிப் பாவத்தைத் தேடிக் கொள்ளும் எண்ணம் ஆகும். ஆணவத்தில் அழுந்தியிருந்தபோது பல்வகைப் பொருளும் தோன்றுதது போலவே, திருவருளில் மூழ்கும்போதும் உலகம் தோன்றுது. அது பற்றிப் பரம்பொருள் ஒன்றே உண்டு, பிற அனைத்தும் பொய்; யானே அப்பரம்பொருள் எனக் கூறுதல் பொருந்தாது.

முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு அவன் அருள்வழி நிற்பார்க்கு அன்றிச் சிவமாந் தன்மையும் வினை நீக்கமும் கிட்டமாட்டா. பேரின்பம் என்பது முதல்வனுடைய சொத்து; அதைப் பெற விடாது தடுப்பது மலவாதனையாகிய செருக்கு. சூரிய ஒளியில் மூழ்கித் தன் இருப்பையும் தோற்றுவியாது நிற்கும் பளிங்குத் தூண் போலத் தன்னை முற்றிலும் முதல்வனது திருவருளிற் கொடுத்து நிற்பார்க்கே மலவாதனை நீங்கும். தழற் கொள்ளியை ஏந்திச் செல்வார்போலத் திருவருளை முன்னிட்டுச் செல்வாரே சிவத்தைத் தலைப்படுவர். அச்சிவம் சிவஞானத்தால் அன்றிப் பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பற்ற முடியாதது.



---

## 8. இன்புறு நிலை

பசுக்கள் பாசத்தை விட்டு பதியினை அடைதலே முத்தி எனப்படும். பதி, தானும் தன் திருவருளும் என இரு தன்மையுள்ள பொருளாதலால், அதனை அடைந்து செறியும் நிலையும் அருணிலை, இன்புறுநிலை என இரு வகைப்பட வைத்து உணர்த்தப்படும். அருணிலை என்பது திருவருளை உணர்ந்து கலந்து ஒற்றுமைப்பட்டிருத்தல். இது உயிர் விளக்கம் என்னும் ஏழாம் அதிகாரத்தால் உணர்த்தப்பட்டது. இனி, அவ்வருள் தனக்கு முதலாக உள்ள சிவத்தைக் காட்டக் கண்டு அதன்கண் செறிந்து பேரின்பம் எய்துதலே இன்புறு நிலை எனப்படும். இவை இரண்டும் அருணோதயம், சூரியோதயம் எனப் பகலின் வருகை இருவகையாக உணரப்படுதல் போல வைத்து உணரத்தக்கவை. அருணிலையைத் துரியநிலை எனவும், இன்புறு நிலையை அதீத நிலை எனவும் சைவ நூல்கள் கூறும்.

துன்பங்களுக்குக் காரணமாகிய பிறப்பு நிலை திருவருளைப் பின்னிட்டு உயிர் முற்பட்டு நிற்றலால் வந்தது; பேரின்பம் விளங்கப் பெறும் முத்திநிலை தன்னைப் பின்னிட்டுத் திருவருளை முன்னிட்டு அடங்கும் அடக்கத்தால் வருவது. அருணிலையைத் தலைப்பட்ட அளவில் பிறவி வெப்பந் தணியுமேயன்றிப் பேரின்ப அநுபவம் விளையாது; அது ஞேயமாகிய சிவத்தைத் தலைப்பட்டுச் செறிவதால் தான் விளையும். இறைவன் வடிவம் இன்பமே ஆம்; ஆதலால் அவனை அணையும் உயிர் இன்பத்தைப் பெறுகின்றது என்பதுதான் பொருந்தும். ஆண் பெண் புணர்ச்சியுட்போல முதல்வனுக்குக் புதிதாக ஓர் இன்பம் அங்கு வரும் எனல் தகாது. தாள்தலை எனப் பிரிந்து ஒலிக்கும் இரு சொற்கள் புணர்நிலைக்கண் தாடலை என ஒரே ஒலியாக ஒலித்து நிற்றல் போலச் சிவன் சீவன் என்னும் இரண்டு அறிவுகள் ஒற்றுமைப்பட்டு இசைந்து பிரிப்பின்றி நிற்கும் நிலையினையே ஏகம் என வேதம் உரைக்கும். சிவப்பேறு எனப்படும் இன்புறு நிலைக்கண் உள்ளது ஒரு பொருளா, இரு பொருளா எனின், ஒன்றே எனின் பெறுவான் இல்லை ஆதலால் பேறும் இன்று; இரண்டு எனின் ஒன்றி அனுபவித்தல் இல்லையாம். ஆதலால், வேதம் அந்நிலையை ஒன்றென்றுங் கூறுது இரண்டென்றுங் கூறுது

**இரண்டற்றது** (அத்துவிதம்) எனக் கூறுகின்றது. இக்கருத்து உணராது அபேதமே என்றும், பேதமே என்றும், பேதாபேதம் என்றும் நூல் அறிவு பேசுவார் கூறுவன எல்லாம் போலி முத்தி எனக் கொள்க. சீவனும் சிவனும் கூடிக் காண்பவன் காட்சி காணப்படு பொருள் என்னும் பகுப்பிறந்து நிற்கும் நிலையே இன்புறு நிலையாம். மெய்யுணர்ந்து சிவத்தின் பேரருளை ஏற்றுக்கொள்ளும் மெய்யன்பு நிகழப் பெறுவார்க்குச் சிவம் அவ்வன்பே இன்பாய் விளங்கி ஆன்மாவைத் தன்னுள் அடங்கக் கொண்டு இன்பை அளிக்கும்.

மேற்கூறிய இருநிலைகளில் அருணிலையைத் தலைப்பட்டோரும், இன்புறுநிலையைப் பெற்றோரும், சிவத்தைத் தலைப்பிரியாது நின்று பரமுத்தியைப் பெறுவர்; கேட்டல் சிந்தித்தல்களில் நின்று உரையுணர்வு இறந்து உணரும் அருணிலையை இப்பிறப்பிலேயே பற்றமாட்டாது நின்றோரும் மீளவந்து பிறவார்; பதமுத்தி எய்திப் பின் பரமுத்தி எய்துவார். ஆசிரியன் அறிவுறுக்குங் குறியில் நின்று செயலற்று இருப்பின் திருவருள் உயிரின் உணர்வில் வெளிப்பட்டுப் பேய்க் கோட்பட்டாற் போல ஆன்மாவைத் தன்வயப்படுத்தி நிற்கும். இச்சாதனத்தால் சிவத்தைத் தலைப்பட்டார் ஆண்டு அறிந்து இச்சித்துப் பற்றுவது சிவாநுபவம் ஒன்றே; மற்றைய ஞானபூசை முதலிய அகப்புற வழிபாடுகள் உறங்குவோர் கைப்பொருள் போல் நீங்கும். ஒண்பொருளைவிட்டு உலகமுகப்படும்போது அம்முத்தர் அவ் வழிபாடுகளைக் குறிக்கொண்டு காப்பர், நெகிழவிடார்.

---

## 9. ஐந்தெழுத்தருணிலை

அறியுநெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை என்னும் மூன்று அதிகாரங்களால் முறையே சிவஞானத்தைக் காண்டலும், அதிற்கலந்து நின்று ஆன்மசுத்தி பெறுதலும், பின் ஞேயத்து அழுந்துதலும் ஆகிய பயன் கூறப்பட்டன. இம்முறையால் சிவத்தைத் தலைப்பட்டார் பாசவாதனைபற்றி உலகமுகப்படின் இந்நிலைகளை நினைப்பித்து உலகிற் செல்லாதபடி தடுத்து ஞான நெறியில் நிற்பிக்கும் மறைமொழியே திருவைந்தெழுத்து மறை. சூக்கும பஞ்சாக்கரம் எனப்படும் பிரணவ கலைகளே திருவைந்தெழுத்தாக நிற்பவை. இவை எல்லா நூற் பொருளும் தம் பொருளேயாகத் திரண்டு கூடிநிற்பவை. இவற்றை ஓதும்போது இவை குறித்து நிற்கும் பொருள்களை எண்ணி நம் உணர்வை நெறிப்படுத்த வேண்டும் - நெறிப்படலே நிற்குமுறை எனப்படும்.



சிவாயநம என்பவற்றில் சி - பேரின்பச் சிவத்தைக் குறிக்கும்; வா - சிவத்தை விட்டுப் பிரியாத திருவருளாகிய பராசத்தியைக் குறிக்கும்; ய - உயிரைக் குறிக்கும்; ந - திரோதான சத்தியையும் அதனால் காரியப்படும் மாயை, கன்மங்களையுங் குறிக்கும்; ம - மூல மலத்தைக் குறிக்கும். மேலும், ந - உயிர் மாயையில் அழுந்தி நிற்கும் சகல நிலையினையும், ம - மலத்தில் அழுந்தி நிற்கும் கேவல நிலையினையும் குறிக்கும். வா - ஆன்மாத் திருவருளில் அழுந்தி நிற்கும் துரிய அருணிலையினையும், சி - ஞேயத்தில் அழுந்தி நிற்கும் துரியாதீத ஆனந்தநிலை (இன்புறுநிலை) யினையும் குறிக்கும்.

இதனால் **சிவா** என்பது முத்திநிலையில் முதல்வன் புரியும் ஞான நடத்தையும், நம - பெத்தநிலையில் நிகழும் ஊன நடத்தையும் குறிப்பன ஆதல் விளங்கும். ய - முதல்வனுக்கும் பாசத்திற்கும் வேறாய், அவற்றைச் சார்ந்து சகல கேவலங்களையோ, அருணிலை ஆனந்த நிலைகளையோ அடைவது என்பதும் விளங்கும்.

நம - முதலாக ஓதினால் திருவருள் பிற்படுதலின், வீடுபேறு கிட்டாது. சிவ - முன்னாக ஓதி நின்றால் ந,ம கெட்டு, ய - அருளைச் சார்ந்து, பின் சிவத்தில் அழுந்தும். சீவன்முத்தர் வா,சி - இவற்றிடையே நிற்பர்.

முத்தன் சிவத்தினின்றும் நீங்காத வகையை நாடி இத்தகைய சாதனங்களை ஞானநூல்கள் கூறுகின்றன.

---

## 10. அணைந்தோர் தன்மை

சிவப்பேறு பெற்ற முத்தர்கள் திருவருளில் அடங்கிநின்று பேரின்பத்தையே நுகர்ந்து நிற்பர். ஐந்தொழில்களில் ஒன்றைச் செய்யவோ, காரணக் கடவுளர் பதவிகளைப் பெறவோ, உலக இன்பம் நுகரவோ கருதார். எல்லா அறிவும் விளங்கப்பெறினும் சிவம் ஒன்றையே உணர்ந்து நிற்பர்.

உலக முகப்படின் திருவருளில் மறைந்து புலன்களால் தாக்கப்படாது தம்மைக் காத்துக் கொள்வர். அவர்க்கு எல்லாஞ் சிவமாய்த் தோன்றும். அவரே பெத்தான்மாக்களுக்குச் சிவமாக நின்று அருள்புரிபவர். பெத்தநிலையில் யான் எனது என்னும் செருக்கோடு செய்யப்படும் வினைகளுக்குப் பயன் உலக இன்பம்; அருள்வழி நிற்கும் முத்தர்களுடைய செய்யாச் செயல்களுக்குப் பரபோகமே பயன்.

நிருவாண தீக்கையில் முத்தருடைய சஞ்சிதம் அழிக்கப்படும். பிராரத்தம் உடல் வினையாய்க் கழியும்; ஆகாமியவினை ஏறாது; ஏறின் ஞானம் அதனை அழித்துவிடும். இவ்வாறு அவர்க்கு வினை நீங்குதலால் பின் பிறவார்.

முத்தர்கள் இவ்வுடம்பு உள்ள போதே அது நீங்கிய பின் எய்தும் பரமுத்தி யின்பத்தைப் பெறுவர். அவர்கள் பெத்தான்மாக்கள் துயருக்கிரங்கி நன்னெறியைத் தம் ஒழுக்கத்தாலும் வாய்மொழியாலும் உலகிற்கு நல்குவர்.

---

கிடைக்குமிடங்கள் :

ஸ்ரீ லங்கா புத்தகசாலை
234, காங்கேசன் துறை வீதி,
யாழ்ப்பாணம்.

ஸ்ரீ சுப்பிரமணிய புத்தகசாலை
235, காங்கேசன் துறை வீதி,
யாழ்ப்பாணம்.

சண்முகநாதன் புத்தகசாலை
257, காங்கேசன் துறை வீதி,
யாழ்ப்பாணம்.

ஸ்ரீ சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம்.